# துர்கேச நந்தினி

## முதல் பாகம்

### முதல் அத்தியாயம்

### தேவாலயம்

வங்காப்தம் 997ல் கோடைக்காலத்தின் இறுதியில் ஒரு நாள், விஷ்ணுபுரத்திலிருந்து மாந்தாரணத்திற்குப் போகும் பாதையில் ஒரு குதிரைவீரன் தனியாகச் சென்று கொண்டிருந்தான். சூரியன் அஸ்தமனம் ஆகும் தறுவாயில் இருப்பதைக் கண்டு குதிரையைக் கொஞ்சம் வேகமாகத் தட்டிவிட ஆரம்பித்தான். ஏனெனில் முன்னால் அவன் வெகு தூரம் செல்ல வேண்டியிருந்தது. காலமோ, கோடை. ஆகையால் சாயந்திரங்களில் எதிர்பாராமல் பலமாக மழை பிடித்துக் கொள்ளும்; வழியில் ஒதுங்குவதற்கோ ஒருவிதமான இடமும் கிடையாது. அந்தப் பிரதேசத்தின் மறுபக்கத்திற்குப் போய்ச் சேர்ந்தானோ இல்லையோ, சூரியாஸ்தமனம் ஆகிவிட்டது; ஆகாயத்தில் கருமேகங்கள் வந்து குவிய ஆரம்பித்தன. குதிரையை நடத்திச் செல்வதே அவனுக்குச் சிரமமாகிவிட்டது. ரஸ்தாவும் திக்குகளும் அவ்வளவு இருண்டுவிட்டன. மின்னலினால் அடிக்கடி ஏற்பட்ட வெளிச்சத்தின் உதவியைக் கொண்டு ஏதோ விதமாகப் பாதையைப் பிடித்துக் கொண்டு போனான் குதிரைவீரன்.

கொஞ்ச நேரத்திற்குள் பெரிய கோடை மழை பொழிய ஆரம்பித்துவிட்டது. மழைத்தாரைகள் பலமாக விழுந்தன. குதிரை வீரன் அவன் போன பாதையில் முன்னேறவே முடியவில்லை. லகானைத் தளரவிட்டு, குதிரையை இஷ்டம்போற் போகவிட்டு விட்டான். இந்த மாதிரி கொஞ்சதூரம் போனதும், குதிரையின் காலில் ஏதோ ஒரு கடினமான பொருள் பட்டுக் கால் தடுக்கிற்று. அந்தச் சமயத்தில் ஏற்பட்ட மின்னல் வெளிச்சத்தில் யாத்திரிகனுக்கு எதிரில் ஒரு பெரிய வெண்மையான வஸ்து ஒரு நிமிஷம் தென்பட்டது. அது ஒரு கட்டிடத்தின் ஸ்தூபியாயிருக்க வேண்டுமென்று எண்ணி அவன் குதிரையை விட்டுக் கீழே இறங்கினான். தன் முன்னால் இருந்த வாசற்படியில்தான் குதிரையின் கால் தடுக்கினது என்று அவன் இறங்கினதும் கண்டு கொண்டான்; ஆகையால் கிட்டே ஏதாவதொரு தங்குமிடம் கட்டாயம் இருக்கவேண்டுமென்று தீர்மானித்தான். இருட்டில் மெள்ளப் படிகளில் கால் எடுத்து வைத்து ஏறினான். அப்பொழுது அது ஒரு தேவாலயம் என்று அவனுக்குத் தெரிந்தது. ஆவலுடன் கோவிலின் சிறிய கதவண்டை சென்று பார்த்தான். அது மூடப்பட்டிருந்தது. கையால் இடித்துப் பார்த்தான். கதவு உள்ளே தாளிடப்பட்டிருந்தது.

அந்த நிர்மானுஷ்யமான பிரதேசத்திலிருந்து அந்தக் கோவிலுக்குள், அந்த வேளையில், யார் இருக்கக்கூடும்? கதவை உள்ளே யார் தாளிட்டுக் கொண்டிருப்பார்கள்? இப்படி யோசித்து அந்த வழிப் போக்கன் கொஞ்சம் ஆச்சரியம் அடைந்தான். அதை அறிந்து கொள்ள வேண்டுமென்ற ஆவலும் அவனுக்கு அதிகமாக இருந்தது அவனுடைய தலையில் மழை கொட்டிக் கொண்டிருந்தது; பல தடவை ஓங்கி கதவைத் தட்டிப் பார்த்தான். கோவிலில் இருந்தவர்கள் நெடுநேரம் உள்ளே இருந்திருக்க வேண்டும்; கதவு திறக்கப்படவில்லை. கதவைக் காலால் ஓங்கி உதைத்துத் திறந்துவிட வேண்டுமென்றுகூட எண்ணினான்; ஆனால் தேவாலயம் ஆதலின் மரியாதை காட்ட வேண்டுமென்று அந்தக் காரியம் செய்யவில்லை. அவன் பலமாகக் கையால் அடித்த அடியில் அந்த மரக் கதவு கொஞ்ச நேரத்திற்கெல்லாம் தளர்ந்து தாள் திறந்தது. கதவு திறக்கவே, அவன் உள்ளே நுழையும்போது, கோவிலின் நடுவிலிருந்து ஒரு குரல் கேட்டது.

அதே நிமிஷம், திறந்திருந்த கதவின் வழியே ஒரு பலமான காற்றடித்ததனால் உள்ளேயிருந்த மங்கலான விளக்கு அணைந்து போய்விட்டது. ஆகவே, கோவிலுக்குள் யாரிருந்தார்கள், விக்கிரகம் எந்தத் தேவதையுடையது என்பதை அவனால் பார்க்க முடியவில்லை. அப்பேர்ப்பட்ட நெருக்கடியிலும் மனம் தளராதவனாய் இளைஞன் கொஞ்சம் சிரித்துக் கொண்டான். பிறகு கோவிலின் நடுவில் வீற்றிருந்த விக்கிரகத்தை நோக்கிப் பக்தியுடன் வணங்கினான். பின்பு எழுந்து அந்த இருளில் நின்று கொண்டு "கோவிலுக்குள்ளே யார்?" என்று உரக்கக் கேட்டான். கேள்விக்கு ஒருவிதமான பதிலும் வரவில்லை; அலங்காரம் காற்றில் அசைந்த சத்தந்தான் கேட்டது. ஆகையால் அதற்குமேல் வார்த்தையைச் செலவு செய்வது வீண் என்று எண்ணி, மழையும் காற்றும் உள்ளே நுழையாமலிருப்பதற்காகக் கதவைச் சாற்றினான். உடைந்துபோன தாழ்ப்பாளுக்குப் பதிலாகத் தானே கதவடியில் இருந்து கொண்டு மறுபடியும், "கோவிலுக்குள் யார் இருந்தாலும் சரி, கேளுங்கள். நான் ஆயுதபாணியாய் இந்த வாசற்படியில் இருக்கிறேன். என்னுடைய ஓய்விற்கு, ஒருவிதமான விக்கினமும் நீங்கள் ஏற்படுத்தக்கூடாது. யாரேனும் இடைஞ்சல் செய்யும் மனிதன் இருந்தால் கட்டாயம் அதன் பலனை அனுபவிப்பான். உள்ளேயிருப்பது

ஸ்திரீகளானால், கவலையின்றித் தூங்கலாம். ராஜபுத்திரன் கையில் வாள் இருக்கிறது; உங்களுக்கு ஒருவிதமான ஆபத்தும் நேராது" என்றான்.

"நீங்கள் யார்?" என்று கோவிலுக்குள்ளிருந்து ஒரு பெண் குரல் கேட்டது.

இதைக் கேட்ட வழிப்போக்கன் ஆச்சரியமடைந்தான்.

"பேச்சுக் குரலிலிருந்து, பேசுவது ஒரு பெண்மணி என்று தெரிகிறது. நான் இன்னார் என்பது அறிவதால் உங்களுக்கு என்ன லாபம்?" என்று கேட்டான்.

"நாங்கள் மிகவும் பயந்து போயிருக்கிறோம்" என்று பதில் வந்தது.

"நான் தற்காலம் இருக்கும் ஸ்திதியில், நான் யார் என்பதை உங்களுக்குத் தெரிவிக்கக்கூடாதவனாய் இருக்கிறேன். ஆனால் நான் இங்கே இருக்கிறவரை பெண் மக்களுக்கு ஆபத்து ஏற்படும் என்ற சந்தேகமே வேண்டியதில்லை' என்று வீரன் கூறினான்.

"உங்கள் வார்த்தையைக் கேட்டு எங்களுக்குக் கொஞ்சம் தைரியம் ஏற்பட்டிருக்கிறது. இல்லாதுபோனால் இதற்குள் நாங்கள் செத்தே போயிருப்போம். இதுவரை என்னுடன்கூட இருப்பவள் பாதி மூர்ச்சையடைந்திருந்தாள். நாங்கள் சாயந்திரம் சைலேசுவரர் தரிசனத்திற்காக இங்கே வந்தோம். திடீரென்று மழையும் காற்றும் வந்ததால் எங்களுடைய வேலையாட்கள் எங்கோ பிரிந்து போய் விட்டார்கள்" என்றாள் அந்தப் பெண்.

"கவலைப்பட வேண்டாம். நன்றாகத் தூங்குங்கள். காலையில் நான் உங்களை உங்கள் வீட்டிற்குக் கொண்டு போய் விடுகிறேன்" என்று அந்த யுவன் சொன்னான்.

"சைலேசுவரன் உங்களுக்கு மங்களம் உண்டாக்கட்டும்" என்று பெண்மணி கூறினாள்.

பாதி ராத்திரியானதும் மழை ஓய்ந்து போய்விட்டது.

"நீங்கள் கொஞ்ச நேரம் தைரியமாக இங்கே இருங்கள்; நான் அருகிலுள்ள கிராமத்திற்குள் சென்று ஒரு விளக்கு சம்பாதித்துக் கொண்டு வருகிறேன்" என்று யுவன் சொன்னான்.

இதைக் கேட்டு, அதுவரையும் அவனுடன் பேசிக் கொண்டிருந்த ஸ்திரீ, "ஐயா, நீங்கள் கிராமம் வரையில்கூடப் போக வேண்டியதில்லை. இந்தக் கோவிற் காவலாளி ஒருவன் அருகில் வசிக்கிறான். நிலா வந்துவிட்டதாகையால், கோவிலுக்கு வெளியே நின்று பார்த்தாலும்கூட அவன் குடிசை கண்ணிற்படும்; அங்கே அவன் தனியாக வசிக்கிறான்; அவன் நிச்சயமாக நெருப்பு உண்டாக்கும் சாதனங்களைக் கைவசம் வைத்திருப்பான்" என்றாள்.

அதன்படி யுவன் கோயிலுக்கு வெளியே வந்து நிலவொளியில் கோவில் காவலனின் குடிசையைக் கண்டுபிடித்தான். அதன் வாசலில் போய் கதவைத் தட்டி அவனை எழுப்பினான். காவலாளன் பயத்தினால் முதலில் கதவைத் திறக்கவில்லை; உள்ளிருந்தே 'யார் வெளியே' என்று பார்த்தான்; நன்றாகப் பார்த்ததில் வந்தவனிடம் திருடனுக்குரிய அடையாளம் ஒன்றும் தென்படவில்லை. மிகவும் யோசித்து கடைசியாக வாசற் கதவைத் திறந்து விளக்கை ஏற்றிக் கொடுத்தான்.

வழிப்போக்கன் விளக்குடன் வந்து கோவிலுக்குள் பார்த்தான். நடுவில் சிவபெருமானுடைய விக்கிரகம் இருந்தது. அந்த விக்கிரகத்தின் பின்பக்கத்தில் இரண்டு பெண்களும் இருந்தனர். அவர்களில் யுவதியாயிருந்தவள் விளக்கைப் பார்த்ததும் வெட்கத்துடன் தலைகுனிந்து கொண்டாள். அவள் உடுத்தியிருந்த ஆடை அணிந்திருந்த நகை இவைகளிலிருந்து அந்த இளமங்கை ஏழைக் குடும்பத்தைச் சேர்ந்தவளல்லள் என்பது தெரிந்தது. மற்றவளின் உடையிலிருந்து அவள் யுவதியின் வேலைக்காரியாக இருக்க வேண்டுமென்று யுவன் ஊகித்தான். அவளுக்கு வயது சுமார் முப்பத்தைந்து இருக்குமென்று தெரிந்தது. வயதில் மூத்தவள்தான் தன்னுடன் பேசினது என்று இளைஞன் நினைத்தான். அவர்கள் இருவருடைய உடையும் அந்தத் தேசத்துப் பெண்கள் சாதாரணமாக உடுக்கும் மாதிரியில்லாமல் இருந்ததைக் கவனித்து ஆச்சரியமடைந்தான். அவர்கள் மேற்கத்திப் பெண்களைப் போல, அதாவது ஹிந்துஸ்தானிப் பெண்களைப் போல, உடை தரித்திருந்தார்கள். இளைஞன் விளக்கை உரிய இடத்தில் வைத்துவிட்டுப் பெண்களுக்கு மரியாதை செய்தான். யுவனுக்கு இருபத்தைந்து வயதுக்குமேல் இராது என்று விளக்கு வெளிச்சத்தில் பெண்களுக்குத் தெரிந்தது. வேறு யாராவது அவ்வளவு உயரமாக இருந்தால் விகாரமாகவே இருக்கும். ஆனால் அந்த யுவனுக்கு மார்பின் விரிவும் உயரமும் மற்ற அங்கங்களின் வளர்ச்சியும் அழகாகவே அமைந்திருந்தன. மழைக் காலத்தில் தோன்றும் புதிய அறுகம்புல் தளிர்களைப் போல மனதைக் கவரும் காந்தி; இளவேனிற் காலத்து இளம் இலைகளின் வரிசைகள் போன்ற கவசம்; இவை ராஜபுத்திர குலத்திற்கேற்ற சோபையை அளித்தன. இடையில் வாள் இருந்தது. வலது கையில் ஈட்டியைத் தாங்கியிருந்தான்.

தலையில் பாகையிருந்தது. அதில் ஒரு பெரிய வைரம். கழுத்தில் ரத்தின ஹாரம். காதுகளில் முத்துக்கள் கொண்ட காதணிகள்.

பரஸ்பரம் 'பரிசயம்' செய்து கொள்ள வேண்டுமென்று இருதரத்தாருக்கும் ஆவலாயிருந்தது; ஆனால் அவ்விஷயத்தில் முதலில் யார் பேசுவதென்று இருவரும் பயந்து தயங்கினார்கள்; கூச்சப்பட்டார்கள்.

## இரண்டாம் அத்தியாயம்

## சம்பாஷணை

முதலில் அவ்விளைய வீரன் தனக்கிருக்கும் அபரிமிதமான ஆவலை வெளியிடலானான். மூத்தவளைப் பார்த்து, "நீங்கள் தனவந்தர்கள் வீட்டு மாதர்கள் என்று அறிகிறேன். பரஸ்பரம் பரிசயம் செய்து கொள்வதில் கொஞ்சம் சங்கடம் இருக்கிறது. என்னைப்பற்றி என் பிறவி, பூர்வோத்தரம் கூறுவதற்குச் சில தடங்கல்கள் இருக்கின்றன. அப்பேர்ப்பட்ட தடங்கல்கள் ஒன்றும் உங்களுக்கு இல்லை" என்றே நம்புகின்றேன் என்றான்.

"பெண் பிள்ளைகள் தங்களைப் பற்றி என்ன சொல்லிக் கொள்ள வேண்டியதிருக்கிறது? அவர்களைக்குக் குடும்பப் பாரங்களையும் கவலைகளையும் ஏற்கும் சக்தியில்லை; அவர்கள் தங்களைப் பற்றி என்ன சொல்லிக் கொள்ள இருக்கிறது? வீட்டுக்குள்ளேயே வாசம் செய்ய வேண்டியது அவர்களுடைய தர்மம்; அவர்களுக்குத் தங்களைப் பற்றி வெளியில் சொல்லி என்ன ஆக வேண்டும்? என்றைக்கு ஸ்திரீகள் தங்களுடைய கணவர்களின் பெயர்களைக்கூடச் சொல்லக்கூடாதென்று பிரம்மா விதித்தாரோ, அன்று முதலே அவர்கள் தங்களைப் பற்றிப் பிரகடனம் செய்து கொள்வதற்குரிய வழியும் அடைபட்டுப் போயிற்று" என்றாள் மூத்தவள்.

இந்த வார்த்தைகளுக்கு இளைஞன் ஒருவிதமான பதிலும் சொல்லவில்லை. அவனுடைய மனது வேறு திக்கில் சென்றிருந்தது. யுவதி கொஞ்சம் கொஞ்சமாகக் குனிந்த தலையை நிமிர்த்தி, தோழியின் பின்புறமிருந்து, கண்கொட்டாமல் அந்த வீரனைப் பார்த்துக் கொண்டிருந்தாள். பேசிக் கொண்டிருந்தபொழுது அகஸ்மாத்தாக அவனுடைய பார்வையும் அந்தப் பக்கம் சென்றது; அவன் தன் கண்களை எடுக்க முடியவில்லை. அப்பேர்ப்பட்ட நிகரற்ற எழிற்பிழம்பை அவன் அதுவரை பார்த்ததில்லை! யுவதியின் கண்களும் இளைஞனின் கண்களும் சந்தித்தன. அவள் சட்டென்று தன் பார்வையைத் திருப்பிக் கீழே குனிந்து கொண்டாள். தோழி தனது வார்த்தைகளுக்குப் பதில் வராதது கண்டு, இளைஞனின் முகத்தைப் பார்த்தாள். அவன் பார்வை சென்ற திக்கைப் பார்த்தாள். உடனே நடந்ததைக் கண்டு கொண்டாள். யுவதியின் காதோடு காதாய், "ஏண்டி, சுவாமி முன்பே சுயம்வரம் செய்து கொண்டாயா?" என்று கேட்டாள்.

யுவதி தோழியின் விரலை அமுக்கிய வண்ணம் அதே குரலில் "போடி!" என்றாள். தோழி கெட்டிக்காரி. அவள் தனக்குள், 'நம்மிடம் ஒப்பிக்கப்பட்டவள் இவள். இந்த அழகனைக் கண்டு மோகித்து இவள் மனதைப் பறிகொடுத்து விட்டால், பிறகு எது எப்படியாகிறதோ என்னவோ யார் கண்டார்கள்? இவளுக்குத் துயரம் வந்து சம்பவிக்கும். ஆகையால் இதை இப்பொழுதே தடுத்துவிட வேண்டியது மிகவும் அவசியம் இதை எப்படிச் செய்து முடிப்பது, இங்கிதமாகவும் மரியாதையாகவும் இந்த இளைஞனை வேறு இடத்திற்கு அனுப்பி விட்டால் சரியாய்ப் போய்விடும்' என்று யோசித்தாள்.

இவ்வாறு எண்ணியவளாய் அவள் யுவனைப் பார்த்து, "ஐயா. பெண் பிள்ளைகளின் நற்பெயர், பாருங்கள், அவ்வளவு மென்மையானது; காற்றுபட்டால்கூட தாங்குகிறதில்லை. இன்று இருப்பது போன்ற புயலில் காப்பாற்றுவது மிகவும் கஷ்டம்; ஆகையால், இப்பொழுது மழை நின்றுவிட்டதா பாருங்கள்; நாங்கள் வந்த வழியாக வீடு போய்ச் சேருகிறோம்" என்று சாமர்த்தியமாகப் பேசினாள்.

"இந்த இரவின் இருட்டில் நீங்கள் தனியாக வீட்டிற்குப் போக வேண்டுமென்றால் நான் உங்களுக்குத் துணையாக இருந்தாக வேண்டும். ஆகாயத்தில் மேகங்களின்றி நல்ல வெளிச்சம் வந்து விட்டால் நான் என் வழியே போகிறேன். ஆனால் உங்களுடைய தோழியைப் போன்ற ரூபவதியை ஒரு பத்திரமான இடத்தில் சேர்க்காமல் நான் போவது நியாயமன்று."

"நீங்கள் எங்களிடம் காட்டும் இந்தத் தயவிற்குப் பிறகும் எங்கள் நன்றிகெட்ட உள்ளத்தில் இருக்கும் எல்லாவற்றையும் உங்களிடம் வெளிவிட்டுச் சொல்ல முடியவில்லையே என்று வருந்துகிறோம். ஐயா, பெண்களின் அசட்டுப் பேச்சுகளை உங்கள் முன்னிலையில் எப்படிப் பேசுவது? நாங்கள் சகஜமாகவே மிக்க அவநம்பிக்கை கொண்டவர்கள். நீங்கள் எங்களுக்குத் துணைநிற்பது எங்களுடைய புண்ணியந்தான். ஆனால் எங்கள் யஜமானர், இவளுடைய தகப்பனார், 'ராத்திரி நீ யாருடன்கூட இருந்தாய்' என்று கேட்டால் என்ன சொல்வது?" என்றாள் மூத்தவள்.

வீரன் கொஞ்ச நேரம் யோசனை செய்தான். பிறகு, "இந்த மாதிரி பதில் சொல்லுங்கள்; மகாராஜா மான்சிங்கின் புத்திரர் ஜகத்சிங்குடன் இருந்தோம் என்று கூறுங்கள்" என்றான்.

அந்தச் சமயத்தில் கோவிலின் நடுவில் இடிவிழுந்திருந்தபோதிலும் அது அந்தப் பெண்களுக்கு அவ்வளவு பரபரப்பைக் கொடுத்திராது. இருவரும் எழுந்து வீரனை வணங்கினார்கள். இளையவள் சிவலிங்கத்திற்குப் பின்னால் போய் நின்றாள். பேச்சற்றுப்போன மூத்தவள் அசைவற்று நின்றாள். கை கூப்பிய வண்ணம்,

"யுவராஜனே! தெரியாமல் பெரிய பிசகு செய்துவிட்டோம். அறிவில்லாத பெண் மக்கள் செய்த குற்றத்தை நீங்கள் மறந்துவிட வேண்டும்" என்றாள்.

"இப்படிப்பட்ட பெருத்த அபராதத்திற்கு மன்னிப்பே இல்லை; இருந்தாலும் நீங்கள் யார் என்பதைச் சொன்னால் மன்னித்து விடுகிறேன். இல்லாவிட்டால் தகுந்த தண்டனை விதிப்பேன்" என்று ஜகத்சிங் சிரித்துக் கொண்டே சொன்னான்.

மிருதுவாகப் பேசுவதால் சில சமயங்களில் பதில் சொல்லுகிறவர்களுக்குக் கொஞ்சம் தைரியம் ஏற்படுகிறது மூத்தவள் கொஞ்சம் சிரித்துக் கொண்டு, "என்ன தண்டனை உத்தரவானாலும் பெற்றுக் கொள்ளத் தயார்" என்றாள்.

ஜகத்சிங் சிரித்துக் கொண்டே, "என்ன தண்டனை தெரியுமா? உங்களை வீட்டுக்குக் கொண்டுவிடப் போகிறேன்" என்றான்.

தோழி பார்த்தாள்; நிலைமை சங்கடமாகி விட்டது. டில்லி பாதுஷாவின் சேனாதிபதியிடம் தன் யஜமானனைப் பற்றிச் சொல்ல அவளுக்கு இஷ்டமில்லாததற்குச் சில காரணங்கள் உண்டு. அவன் இவர்களை வீட்டுக்குக் கொண்டு போய் விடுவதென்றால் யார் என்பது தெரிந்துவிடும். ஆகையால் தலைகுனிந்து கொண்டு சும்மா இருந்தாள்.

அந்தச் சமயத்தில் அருகில் பல குதிரைகள் வரும் காலடிச் சத்தம் கேட்டது ராஜபுத்திரன் கோவிலுக்கு வெளியே சென்று பார்த்தபொழுது சுமார் நூறு குதிரை வீரர்கள் வருவதைக் கண்டான். அவர்களுடைய உடையடையாளங்களிலிருந்து அவர்கள் தன்னுடைய ராஜபுத்திர சைனியந்தான் என்று அறிந்து கொண்டான். இந்தப் படையுடன் ஜகத்சிங் விஷ்ணுபுரத்தை நோக்கித் தன் தந்தையிடம் போய்க் கொண்டிருந்தான். மாலையில் அவர்கள் முன்னும் இவன் பின்னுமாகப் போய்க்கொண்டிருந்தபொழுது அவர்கள் ஒரு பாதையிலும், இவன் ஒரு பாதையிலுமாகப் பிரிந்து போய் விட்டார்கள். கடைசியாக ராஜபுத்திரன் மழையில் அகப்பட்டுக் கொண்டான். அவர்கள் அப்பொழுது அவனைக் கண்டதும், "டில்லி பாதுஷாவிற்கு ஜே!" என்று கோஷம் செய்தார்கள். ஒரு குதிரை வீரன் ராஜபுத்திரனின் அருகே வந்தான். ராஜபுத்திரன் அவனைப் பார்த்து "தர்மசிங், இந்த மழைக்காக நான் இந்த இடத்தை நாடி வந்தேன்" என்றான்.

தர்மசிங் மரியாதையுடன் வணங்கிவிட்டு, "நாங்கள் வெகுதூரம் யுவராஜாவின் குதிரை அடிச்சுவடுகளைப் பின்பற்றி இங்கு வந்து சேர்ந்தோம்; குதிரையை அந்த ஆலமரத்தடியில் கண்டோம்" என்றான்.

"குதிரையை இங்கே கொண்டு வந்துவிட்டு நீங்கள் இங்கே தங்குங்கள்; இரண்டு பேர், அருகில் இருக்கும் கிராமத்திற்குச் சென்று ஒரு பல்லக்கு அமர்த்திக் கொண்டு வாருங்கள். பாக்கி சேனை, முன்னே போய்க் கொண்டு இருக்கலாம்" என்று ஜகத்சிங் கட்டளையிட்டான்.

இந்தக் கட்டளையைக் கேட்டு, தர்மசிங் கொஞ்சம் ஆச்சரியம் அடைந்தான். ஆனால் எஜமானின் கட்டளையைப் பற்றிக் கேள்வி கேட்பது தவறு என்று எண்ணி, "உத்தரவுப்படி" என்று சொல்லிவிட்டுச் சைனியத்திற்கு யுவராஜனின் கட்டளையைத் தெரிவித்தான். இந்தப் பேச்சைக் கேட்டு, சைனியத்தில் சிலர் சிரித்துக் கொண்டு ஒருவருக்கொருவர் பேசிக் கொண்டார்கள்.

"இன்று இது பெரிய புது வழக்கமாயிருக்கிறதே?" என்றான் ஒருவன்.

"ஏன் இருக்கக் கூடாது? ராஜபுத்திர மகாராஜாவிற்கு எவ்வளவோ பட்டமகிஷிகள்" என்றான் மற்றொருவன்.

இந்த மாதிரி ராஜபுத்திரனின் கவனம் வேறிடம் சென்றிருந்த தருணம் பார்த்து இளையவள் குனிந்த தலையை நிமிர்த்தித் தோழியைப் பார்த்து, "விமலா, ஏண்டி இவரிடம் நாம் யாரென்பதைச் சொல்லக்கூடாதென்கிறாய்?" என்று கேட்டாள்.

"அதற்குப் பதில் உன் தகப்பனார் முன்னிலையில் சொல்லுகிறேன். இவர்களைப் பற்றி நமக்கு என்ன தெரியும்?"

"அவருடைய சைனியம் இங்கே வந்ததிலிருந்து ராஜ புத்திரம் விஷயம் நமக்குத் தெரிந்துவிட்டதே இவரே நிச்சயமாக ராஜபுத்திரராயிருக்கும் பொழுது, நாம் ஏன் பயப்பட வேண்டும்?"

பல்லக்கு அமர்த்திக் கொண்டு வரச் சென்ற குதிரை வீரர்கள் திரும்புவதற்குள், மழை பெய்தபொழுது, அந்த ஸ்திரீகளை விட்டுப் பிரிந்து, கிராமத்திற்குள் சென்று ஒதுங்கியிருந்த போகிகளும், வேலையாட்களும் அங்கே வந்து சேர்ந்தனர். அவர்கள் வருவதைத் தூரத்திலேயே கவனித்து யுவராஜன் கோவிலுக்குள் சென்று மூத்தவளிடம், "ஆயுதங்கள் தரித்த சிலருடன், சில போகிகள் ஒரு சிவிகை கொண்டு வருகிறார்கள்; அவர்கள் உங்களுடைய ஆட்களா பாருங்கள்" என்றான். விமலா கோவில் வாசலில் நின்று கொண்டு பார்த்தாள். தங்களுடைய ஆட்களே என்று கண்டாள்.

"நான் இனிமேல் இங்கே தாமதம் செய்வது உசிதமில்லை. நான் உங்களுடன் இருப்பதைப் பார்த்து உங்கள் ஆட்களிடையே ஏதாவது சந்தேகம் உண்டாகலாம். அது நமக்குக் கெடுதலாக முடியலாம். ஆகையால் நான் போய் வருகிறேன். நீங்கள் இடையூறின்றி வீடு போய்ச் சேரவேண்டுமென்று சைலேசுவரரைப் பிரார்த்திக்கிறேன் உங்களையும் ஒன்று கேட்டுக் கொள்கிறேன்; நாம் சந்தித்துக் கொண்ட இந்தத் தகவலை இன்னும் ஒரு வாரம்வரை யாரிடமும் வெளியிட வேண்டாம். ஞாபகம் இருக்க வேண்டும். ஞாபகார்த்தமாக இந்தச் சின்ன அடையாளத்தையும் வைத்துக் கொள்ளுங்கள். உங்களுடைய யஜமானனின் பெண்ணுடன் எனக்குப் பரிச்சயம் ஏற்படாததையே என் மனதில் நான் ஒரு ஞாபகார்த்தச் சின்னமாக வைத்துக் கொள்ளுகிறேன்" என்று சொல்லிக் கொண்டு ஜகத்சிங் பாகையிலிருந்து ஒரு முத்து மாலையை எடுத்து வேலைக்காரியிடம் கொடுத்தான்.

விமலா அந்த விலையுயர்ந்த மாலையை அணிந்து பணிவுடன் ராஜபுத்திரனைப் பார்த்து "யுவராஜ! நாங்கள் யாரென்று உங்களிடம் சொல்லாததற்காக என்மேல் கோபம் கொள்ளக்கூடாது. அதற்கு முக்கியமான காரணம் இருக்கிறது. ஆனால் உங்கள் ஆவல் கட்டுக்கடங்காமல் போய் விட்டால், இன்று முதல் பதினைந்து நாளைக்குள் சொல்லியனுப்புங்கள்" என்றாள்.

ஜகத்சிங் கொஞ்ச நேரம் யோசித்தான். "இன்று முதல் பதினைந்தாம் நாள் இரவில் இங்கேயே என்னைக் காணலாம். இல்லையென்றால் என்னைப் பார்க்க முடியாது" என்றான்.

"கடவுள் உங்களைக் காப்பாற்றுவாராக!" என்று சொல்லி விமலா மறுபடியும் அவனை வணங்கினாள். ராஜகுமாரன் மறுபடியும் தடுக்க முடியாத ஆசையால் தூண்டப்பட்டவனாக யுவதியை நோக்கினான்; பிறகு குதிரைமேல் ஏறிக் கொண்டு போய்விட்டான்.

## மூன்றாம் அத்தியாயம்

## மொகலாயரும் பட்டாணியரும்

நள்ளிரவில் ஜகத்சிங் சைலேசுவரர் கோவிலை விட்டுக் கிளம்பி வெளியேறினான். அவனைப் பின்பற்றிச் செல்லுவதற்கு முன், கோவிலில் இருந்த யுவதி யார் என்று வாசகர் மனத்தில் கிளம்பும் கேள்விக்கு எப்படிப் பதில் சொல்லாமலிருக்கிறது? ஜகத்சிங் ராஜபுத்திரன்; எதற்காக வங்காளத்திற்கு வந்திருக்கிறான், எதற்காக அந்தப் பிரதேசத்தில் தனியாகப் பிரயாணம் செய்து கொண்டிருக்கிறான் என்பவையும் தெரிய வேண்டுமல்லவா? இந்த விவரங்களைக் கூற வேண்டிய இந்தச் சந்தர்ப்பத்தில் அந்தக் காலத்து வங்காளத்தின் ராஜீய நிலையைச் சிறிது சுருக்கமாகச் சொல்ல வேண்டியிருக்கிறது. எனவே, இந்த அத்தியாயம் முழுவதும் சரித்திர சம்பந்தமானது; வாசகர் வேண்டுமானால் இதைப் படிக்காமல் மேலே போகலாம். ஆனால் ஆசிரியர் அவசியம் இதை எழுதியாக வேண்டியிருக்கிறது.

வங்காளத்தில் ரக்தியார் கில்ஜி முகம்மதிய ஜயக் கொடியை நாட்டின பிறகு, சில நூற்றாண்டுகளுக்குப் பட்டாணியர் வேறு தொந்தரவின்றி அங்கே அரசாண்டு வந்தனர். 972ம் வருஷத்தில் பிரசித்திப் பெற்ற பாபர் டில்லி பாதுஷா இப்ராகிம் லோடியைப் போரில் கொன்று சிம்மாசனம் ஏறினான். அப்பொழுது வங்காளம் தைமூர் லேனின் வம்சத்தவர்களுடைய ஆதீனத்திற்குள் இல்லை. மொகலாய வம்ச குலதிலகமாகிய அக்பர் தோன்றும் வரை இந்தத் தேசத்தில் பட்டாணியர் அரசாட்சி புரிந்து வந்தார்கள். கெட்ட காலம் வந்ததால் தாவுத்கான் யோசனையின்றித் தூங்கிய சிங்கத்தைத் தொட்டு எழுப்பினான். தன் வினையின் பலனாகவே அக்பருடைய சேனாதிபதி மனாயிம்கான் கையில் தோல்வியடைந்து ராஜ்யத்தை இழந்தான். 982ம் வருஷம் தாவுத்கான் தன் பரிவாரங்களுடன் ஒரிஸ்ஸாவை நோக்கி ஓடிவிட்டான். வங்காளம் மொகலாய அரசர்கள் கைவச மாயிற்று. பட்டாணியர் உத்கலத்தில் வசதிபெற்று வலிவு அடைந்தார்கள். அவர்களை அவ்விடம் விட்டு அகற்றுவது மொகலாயர்களுக்குக் கொஞ்சம் சிரமமாகி விட்டது. 986ம் வருஷம் டில்லி பாதுஷாவால் அனுப்பப்பட்ட கான் ஜாஹாகான் மறுபடியும் பட்டாணியரைத் தோல்வியடையவைத்து உத்கலத்தை மொகலாய ஆட்சிக்குக் கீழே கொண்டு வந்தான். இதற்குப் பிறகு மற்றொரு பெரிய உபத்திரவம் ஏற்பட்டது. வங்காளத்தில் வரிவசூல் செய்வதற்காக அக்பர் புது உத்தியோகஸ்தர்களை அனுப்பியிருந்தார். ஜாகீர்தார்கள் முதலிய நிலச்சுவான்தார்களுக்கு அவர்களிடம் அதிருப்தி ஏற்பட்டது. அவர்கள் தங்கள் தங்கள் முந்திய பாத்தியதைகளையும் சுதந்திரத்தையும் பெறும் பொருட்டு வாளேந்திக் கலகம் ஏற்பட்ட சமயத்தில் ஒரிஸ்ஸாவிலிருந்த பட்டாணியர் மறுபடியும் தலையெடுத்து முன்வர ஆரம்பித்தார்கள் கத்லுகான் என்ற பட்டாணியன் மறபடியும் ஒரிஸ்ஸாவைக் கைப்பற்றிக் கொண்டான். மேதினிபுரமும் அவன் அதிகார எல்லைக்குள் சேர்ந்துவிட்டது.

பாதுஷாவால் முதலில் கான் அஸீமும் பிறகு ஸாஹ்பாஜ்கானும் அனுப்பப்பட்டார்கள். அவர்களால் அந்தப் பிரதேசத்தைப் பட்டாணியரிடமிருந்து கைப்பற்ற முடியவில்லை. கடைசியாகப் பாதுஷா ஒரு ஹிந்து யுத்த வீரனை அனுப்பினார்.

முன் சென்ற மொகலாய சக்ரவர்த்திகள் எல்லோரைக் காட்டிலும் அக்பர் மிகுந்த புத்திமான். இந்நாட்டு ராஜீய விஷயங்களில் காரியம் செய்து முடிப்பதற்கு இந்நாட்டினரே அன்னியரைக் காட்டிலும் லாயக்கானவர்கள், அதிக தேர்ச்சி பெற்றவர்கள், என்பது அவருடைய தீர்மானம். ஆகையால் யுத்தத்திலும் அரசாட்சியிலும், ராஜபுத்திரர்களே முதல் ஸ்தானம் வகிக்க வேண்டியவர்கள் என்று அவர் எந்தச் சந்தர்ப்பத்திலும் முக்கியமாக ராஜபுத்திரர்களையே அம்மாதிரி வேலைகளில் நியமனம் செய்தார்.

கதை நடைபெறும் சமயத்தில் அப்படி மரியாதை செய்யப்பட்ட ராஜபுத்திரர்களில் மகாராஜா மான்சிங் பிரதானமானவராக இருந்தார். அவர் அக்பருடைய மகன் சலீமின் தாய்மாமன். ஆஸீம்கானும் ஸாஹ்பாஜ்கானும் உத்கலத்தை மீட்க முடியாமல் திரும்பவே, அக்பர் இந்த வீரனை வங்காளம், பீகார் ஆகிய நாடுகளைப் பரிபாலிப்பதற்காக அனுப்பினார்.

996ம் வருஷத்தில் மான்சிங் பாட்னாவிற்கு வந்து உபத்திரவங்களையெல்லாம் நீக்கினார். அடுத்த வருஷம் உத்கலத்தைத் திருப்பிக் கைப்பற்றிவிட எண்ணி அதை நோக்கிப் புறப்பட்டார். ஆனால் முதலில் பாட்னாவில் தங்கியதில் அங்கேயே இருக்க வேண்டுமென்று தோன்றியபடியால் தமக்குப் பதிலாக சையத்கானை வங்காளத்தைக் கவனிக்குமாறு நியமனம் செய்தார். இந்தப் பதவியை அடைந்ததும் சையத்கான் தாண்டா நகரை வங்காளத்திற்குத் தற்காலிகமாகப் பிரதான நகராக்கினார். இந்தச் சமயத்தில் மான்சிங் போர் ஆரம்பிக்க வேண்டுமென்ற நோக்கத்துடன் பிரயாணம் செய்து தம்முடன் வந்து சேர்ந்து கொள்ளும்படி சையத்கானுக்குச் சொல்லி அனுப்பினார்.

மான்சிங் வர்த்தமான நகரத்திற்கு வந்து பார்த்தபொழுது சையத்கான் தாம் சொல்லியனுப்பியபடி வராததைக் கண்டார். ஒரு தூதன் மட்டும் அவரிடமிருந்து செய்தி கொண்டு வந்திருந்தான். சைனியம் சேகரிப்பதில் தாமதம் ஏற்படுவதாயும், சேகரித்துத் தயார் செய்வதற்குள் மழைக்காலம் ஆரம்பமாகிவிடுமாகையால் அது முடியும்வரை மகாராஜா மான்சிங் கூடாரம் அடித்துக் கொண்டு அங்கேயே இருக்க வேண்டுமென்றும், தாம் மழைக்காலம் முடிந்ததும் சைனியத்துடன் அங்கு வந்து சேருவதாகவும் சொல்லி அனுப்பி யிருந்தார். மான்சிங் வேறு வழியின்றி அங்கேயே தாருகேசுவரத்தின் கரையில் கூடாரம் அடித்துக் கொண்டு தங்கினார். சையத்கானின் வருகையை அவர் எதிர் பார்த்துக் கொண்டிருந்தார்.

இப்படியிருக்கும்பொழுது மான்சிங்கிற்கு ஒரு செய்தி கிடைத்தது. மான்சிங் முன்னேறாமல் தாமதித்ததைக் கண்டு கத்லுகான் தைரியமடைந்தான்; மாந்தாரணத்திற்கு அருகே வந்து அந்தப் பிரதேசத்தைக் கொள்ளையடிக்க ஆரம்பித்தான். ராஜா கோபாவேசங் கொண்டார். சத்துருவின் பலம் எப்படிப்பட்டது, என்ன அபிப்பிராயத்துடன் வந்திருக்கிறான், என்ன செய்வது என்ற விஷயங்களைப் பற்றி அறிந்து ஆலோசனை செய்வதற்காக முதலில் ஒரு முக்கியமான சேனைத் தலைவனை அந்தப் பிரதேசத்திற்கு அனுப்ப வேண்டுமென்று யோசித்தார். யுத்தத்தில் கலந்து கொள்வதற்காக மான்சிங்குடன் அவருடைய அருமைப் புதல்வன் ஜகத்சிங்கும் வந்திருந்தான் இந்தச் சிரமசாத்தியமான வேலையை ஏற்றுக் கொள்ள ஜகத்சிங் ஆவலுடையவனாய் இருப்பதைக் கண்டு மான்சிங் அவனை நூறு குதிரை வீரர்களுடன் சத்துரு தங்கியிருந்த திக்கை நோக்கி அனுப்பினார். வெகு சீக்கிரத்தில் ராஜபுத்திரன் போன காரியத்தைச் சாதித்துக் கொண்டு திரும்பினான். அதை முடித்துக் கொண்டு தன் தகப்பனாரின் கூடாரத்திற்குத் திரும்பும் வழியில்தான் நாம் அவனைச் சந்தித்தோம்

## நான்காம் அத்தியாயம்

## இளம் சேனாதிபதி

சைலேசுவரர் கோவிலை விட்டுப் புறப்பட்டு ஜகத்சிங் தன் தகப்பனாரிடம் வந்து சேர்ந்தான்.

ஐம்பதினாயிரம் பட்டாணியர் கொண்ட சேனை தரபுரத்துக்கு அருகில் ஓரிடத்தில் முகாம் போட்டுக் கொண்டு, பக்கத்திலிருந்த எல்லாக் கிராமங்களையும் கொள்ளையடித்து, ஒவ்வோர் இடத்திலும் கோட்டைகள் கட்டி அரசாட்சி ஏற்படுத்தி, எதிர்ப்பின்றி அட்டகாசம் செய்து கொண்டு இருந்தார்கள் என்று ஜகத்சிங் மூலம் மான்சிங் அறிந்தார். பட்டாணியருடைய அந்த ஆக்கிரமிப்பை உடனே தடுத்து அடக்க வேண்டியது மிகவும் அவசியம் என்பதைக் கண்டார்; ஆனால் அந்தக் காரியம் லேசானதாகத் தோன்றவில்லை.

அந்த நிலைமையில் என்ன செய்ய வேண்டுமென்பதைப் பற்றிக் கலந்து ஆலோசிப்பதற்காகச் சேனைத் தலைவர்களைக் கூட்டி, விருத்தாந்தம் முழுவதும் விவரித்துச் சொன்னார்.

"நாளுக்கு நாள், கிராமம் கிராமமாக, பர்காணம் பர்காணமாக, பாதுஷாவின் ஆதீனத்திலிருந்து நழுவிக் கொண்டே இருக்கின்றன. இந்தச் சமயத்தில் பட்டாணியரைத் தண்டித்து அடக்காவிட்டால் மோசம் வந்துவிடும். ஆனால் அவர்களை எப்படிச் சரியானபடி தண்டித்து அடக்குவது என்பதுதான் கேள்வி. அவர்கள் கோட்டைகளின் பாரிசங்களிலிருந்து கொண்டு யுத்தம் செய்வார்கள்; அவர்களை அந்த நிலைமையில் தோல்வியுறச் செய்வதோ, துவம்ஸம் செய்வதோ, இடத்தைவிட்டு விரட்டுவதோ முடியாத காரியம். அவர்கள் கோட்டைகளுக்குள் கவலையின்றி இருப்பார்கள். இவற்றையெல்லாம் யோசித்துப் பார்த்தாக வேண்டும். நாம் தங்கும் இடமின்றிச் சத்துருவின் நடுவே இருந்தால் நாசமடைவோம். அவசரப்பட்டு முரட்டுத் தைரியம் கொண்டு டில்லி பாதுஷாவின் பெரிய சைனியத்திற்கு நாசத்தைத் தேடக்கூடாது. ஒரிஸ்ஸா நாட்டைக் கைப்பற்றும் ஆசையை ஒரேயடியாகப் போக்கி நிலைமையைக் குட்டிச்சுவராக்குவதும் மிகவும் அநுசிதமான காரியமென நினைக்கிறேன். சையத்கானின் வருகையை எதிர்பார்த்துக் கொண்டு காத்திருப்பதே நல்லதென்றும் எனக்குத் தோன்றுகிறது. ஆனால் வைரிகள் சைனியத்தைச் சட்டென்று சிக்ஷிப்பதற்கு ஏதாவது ஓர் உபாயம் தேடியாக வேண்டும். உங்களுடைய யோசனையைக் கூறுங்கள்" என்றார் அவர்.

வயது முதிர்ந்த சேனைத் தலைவர்களெல்லாம் ஏகமனதாகச் சையத்கானின் வருகையை எதிர்பார்ப்பதுதான் சரியென்று ஸ்தாபித்தார்கள்.

"சைனியம் முழுவதையும் ஒரேயடியாக நாசமாக்க வேண்டாம். தேர்ச்சி பெற்ற சேனைத் தலைவன் ஒருவனது தலைமையின் கீழ்ச் சேனையின் ஒரு சிறு பகுதியை மட்டும் சத்துருவை நோக்கிப் போகும்படி அனுப்பலாமென்று நான் நினைக்கிறேன்" என்று மான்சிங் சொன்னார்.

ஒரு பழைய காலத்து மொகலாய வீரன், "மகாராஜ்! முழு சேனையை அனுப்புவதிலேயே நமக்குச் சந்தேகம் இருக்கும்பொழுது ஒரு சிறு பகுதியை அனுப்பினால் அது என்ன சாதிக்கப் போகிறது?" என்றான்.

"சிறு படையை நேரே நின்று யுத்தம் செய்யுமாறு அனுப்ப வேண்டுமென்று உத்தேசமில்லை; இந்தச் சின்னப் பகுதியானது மறைந்திருந்து கிராமங்களைக் கொள்ளையடிப்பதில் முனைந்திருக்கும் பட்டாணியரைத் தனியாகத் தாக்கி அடக்கலாமல்லவா?"

"மகராஜ்! நிச்சயமாகச் சாவு கிட்டும் என்று தெரிந்து கொண்டு எந்தச் சேனைத் தலைவனாவது போக முன் வருவானா?" என்று மொகலாயன் கேட்டான்.

மான்சிங் கோபத்துடன், "என்ன? இவ்வளவு ராஜபுத்திரர்களுக்கும், மொகலாயர்களுக்கும் நடுவே மிருத்தியுவிற்குப் பயப்படாதவர் யாரும் இல்லையா?" என்று கேட்டார்.

இந்த வார்த்தையைக் கேட்டதுமே ஏழெட்டு ராஜபுத்திரர்களும் மொகலாயர்களும் துள்ளியெழுந்து "மகாராஜ்! நாங்கள் புறப்படத் தயாராயிருக்கிறோம்" என்றார்கள்.

ஜகத்சிங்கும் அவர்களுடன் எழுந்து நின்றான். வயதில் அவன் எல்லோரைக் காட்டிலும் இளையவன்; எல்லோருக்கும் பின்னால் நின்றுகொண்டு, "உத்தரவானால் டில்லி பாதுஷாவின் காரியத்தைக் கைகூடச் செய்வதில் நானும் என்னால் இயன்றதைச் செய்கிறேன்" என்றான்.

ராஜா மான்சிங் சிரித்துக் கொண்டு, "ஏன் கூடாது? ராஜபுத்திரர்கள் மொகலாயர்கள் இவர்களுடைய பெயர் கெட்டுப் போகும் காலம் இன்னும் வரவில்லை என்பதை இப்பொழுது நான் அறிகிறேன். இந்தக் கஷ்டமான காரியத்தைச் செய்து முடிக்க நீங்கள் எல்லோரும் முன்வந்திருக்கிறீர்கள். உங்களில் யாரை அனுப்புவது, யாரை நிறுத்திக் கொள்வதென்றுதான் எனக்குத் தெரியவில்லை" என்றார்.

ஒருவன் சிரித்துக் கொண்டு, "இந்தக் காரியத்தைச் செய்து முடிப்பதற்கு அநேகர் முன்வருவது நல்லதுதான். அதனால் சேனை வீணாவதைக் குறைக்கலாம். எவன் மிகவும் குறைந்த சேனையுடன் போகத் தயாராக இருக்கிறானோ அவனை நீங்கள் அனுப்பலாம்" என்றான்.

அது மிகவும் உத்தமமான யோசனை என்றார் மகாராஜா மான்சிங். பிறகு, போகிறேன் என்று முதலில் எழுந்தவனைப் பார்த்து, "நீ போனால் உனக்கு எத்தனை பேர் வேண்டும்?" என்று கேட்டார்.

"ஐம்பதினாயிரம் காலாட்படை இருந்தால் நான் காரியத்தைச் சாதித்து விடுவேன்" என்றான் அந்தச் சேனாதிபதி.

"இங்கிருந்து 50,000 பேரைப் பிரித்துக் கொடுக்க முடியாது. 10,000 பேர் படையுடன் எந்த வீரன் யுத்தத்திற்குப் போகத் தயார்?" என்று மான்சிங் கேட்டார்.

சேனாதிபதிகள் மௌனமாக இருந்தார்கள். கடைசியாக ராஜாவின் பிரியத்திற்கு மிகவும் பாத்திரனாயிருந்த யசவந்தசிங் என்ற ராஜபுத்திரன் ராஜாவின் கட்டளையை நிறைவேற்ற அனுமதி கோரினான் மான்சிங் மனமகிழ்ச்சிக் கொண்டவராய், எல்லோரையும் சுற்றி ஒருதரம் பார்க்கலானார். குமாரன் ஜகத்சிங் தகப்பனாரின் கண்ணிற்படுவதற்காக வணங்கி நின்றான். தன்மேல் ராஜாவின் கண் விழுந்ததும் அவன் மரியாதையாக, "மகாராஜா! உத்தரவானால் அடியேன் 5000 பேருடன், ஒத்தாசையுடன் கத்லுகானை சுவர்ண ரேகாவின் ஒரு கரையிலேயே நிறுத்தி விடுகிறேன்" என்றான்.

ராஜா மான்சிங் பேசவில்லை. சேனாதிபதிகள் ஒருவருக்கொருவர் காதோடு காதாகப் பேச ஆரம்பித்தார்கள். ஒரு க்ஷணம் கழிந்தது. ராஜா குமாரனைப் பார்த்து, "ஜகத்! நீ சொல்வது ராஜபுத்திர குலத்திற்கு மிகவும் ஏற்றதுதான். ஆனால் உனது தைரியம், அசட்டுத் தைரியம்" என்றார்.

ஜகத்சிங் கைகூப்பியவண்ணம், "நான் என் பிரதிக்ஞையைக் காப்பாற்ற முடியாவிட்டால் பாதுஷாவின் சைனியம் நாசமாகும். அப்பொழுது எனக்கு அரசர் தக்கவாறு தண்டனை விதிக்கட்டும்" என்றான்.

மான்சிங் சிறிதுநேரம் யோசனை செய்துவிட்டு, "நீ ராஜபுத்திர குலதர்மத்தை நிறைவேற்றுவதில் நான் தடங்கல் செய்யவில்லை. நீயே இந்தக் காரியத்தைச் செய்யப் போகலாம்" என்றார்.

இவ்வாறு கூறி, மான்சிங் கண்ணீருடன் மகனை ஆலிங்கனம் செய்து கொண்டு விடை கொடுத்தார். சேனாதிபதிகள் தங்கள் தங்கள் கூடாரங்களுக்குத் திரும்பினார்கள்.

## ஐந்தாம் அத்தியாயம்

## மாந்தாரணக் கோட்டை

ஜகத்சிங் விஷ்ணுபுரத்திலிருந்து எந்த வழியாக ஜாஹானாபாத்திற்குத் திரும்பினானோ அந்தப் பாதையின் அடையாளங்கள் இன்றும் இருக்கின்றன. அதற்குக் கொஞ்சம் தெற்கே மாந்தாரணம் என்ற கிராமம் இருக்கிறது. அது இப்பொழுது சிறிய கிராமமாக இருக்கிறது; ஆனால் அந்தக் காலத்திலோ நல்லவளம் கொண்ட நகரமாக இருந்தது. முன்னே கூறியபடி பெண்களுடன் சந்திப்பு ஏற்பட்ட அந்தச் சிவாலயத்திலிருந்து கிளம்பிய ஜகத்சிங் இந்தக் கிராமத்தை நோக்கித்தான் சென்றான்.

மாந்தாரணத்தில் ஒரு பழைய காலத்துக் கோட்டையொன்று இருந்தது; அதனால்தான் அதற்கு மாந்தாரணக் கோட்டை என்று பெயர் ஏற்பட்டிருக்க வேண்டும். நகரத்தின் நடுவில் ஆமோதர நதி ஓடிக் கொண்டிருந்தது. ஓரிடத்தில் நதி வளைந்து நகரத்தின் ஒரு முக்கோண பாகத்தின் இருபுறங்களையும் அணைத்துக் கொண்டு சென்றது. அந்தத் திரிகோண பூமியின் மூன்றாவது பக்கத்தில் மனிதரால் தோண்டப்பட்ட அகழ் ஒன்று இருந்தது. அதே பிரதேசத்தின் ஓரத்தில் நதி வளைந்து வந்த இடத்தில் ஒரு பெரிய கோட்டை ஜலத்திலிருந்து கிளம்பியதுபோல ஆகாயத்தில் தலையெடுத்துப் பிரகாசித்து நின்றது. கீழ்முதல் மேல் வரை மாளிகை கறுப்புச் சலவைக்கல்லால் கட்டப்பட்டிருந்தது. இரண்டு பக்கங்களிலும் நதியின் வேகமான வெள்ளம் கோட்டையின் அடிப்பாகத்தை அலசிக் கொண்டு சென்றது. இன்று கூட, வழிப்போக்கன் மாந்தாரணக் கோட்டையென்னும் கிராமத்திற்குச் சென்றால் லேசில் அடையமுடியாத அந்தக் கோட்டையின் விசாலமான ஸ்தூபத்தைக் காணலாம். கோட்டையின் அடிப்பாகம் மட்டுந்தான் இப்பொழுது தென்படுகிறது. காலத்தின் கொடுமை கட்டிடத்தைக் கல்லும் மண்ணுமாக்கிவிட்டது. மரம், செடி கொடிகள் வனமாக வளர்ந்துவிட்டன; பாம்பு, புலி, கரடி முதலிய துஷ்ட ஜந்துக்களுக்கு அது இருப்பிடமாக ஆகிவிட்டது. நதியின் எதிர்க்கரையில் சில சில்லரைக் கோட்டைகள் இருந்தன.

வங்காளத்தில் அரசாண்டு வந்த பட்டாணிய அரசர்களின் சிரோபூஷணமான ஹூசேன் ஷாவின் பிரபல சேனாதிபதி இஸ்மயில்காஜி என்றவன்தான் இந்தக் கோட்டையைக் கட்டினான். ஆனால் கொஞ்ச காலத்திற்குப் பிறகு ஜயதர சிங் என்ற ஒரு ஹிந்து வீரன் இதை ஜாகீராக அடைந்தான். நாம் விவரிக்கும் காலத்தில் அந்த ஜயதர சிங்கின் வம்சத்தில் தோன்றிய வீரேந்திரசிங் என்பவன் அங்கே வசித்து வந்தான்.

வீரேந்திரசிங் இளைஞனாக இருந்தபொழுது தன் தந்தையுடன் மனஸ்தாபம் கொண்டு விட்டான். இயற்கையாகவே வீரேந்திரசிங் டாம்பீகப் பிரகிருதி; எப்பொழுதும் தகப்பனார் சொன்னதைக் கேட்பதே இல்லை; அந்த மாதிரி சதா தகப்பனாருக்கும் பிள்ளைக்கும் சச்சரவு இருந்து கொண்டேயிருந்தது. மகனுக்குக் கலியாணம் செய்வதற்காகக் கிழவர், பக்கத்திலிருந்த மற்றொரு ஸ்வஜாதி ஜமீன்தாரின் பெண்ணைப் பேசி வைத்திருந்தார். பெண்ணின் தகப்பனாருக்கு வேறு பிள்ளை இல்லை; ஆகையால் அம்மாதிரி சம்பந்தத்தால் சொத்து இரட்டிக்கும் என்று தகப்பனார் யோசித்தார். பெண்ணும் அழகாகவே இருந்தாள். எல்லா விதத்திலும் அந்தக் கலியாணம் சிறப்பாகவே இருக்கும் என்று கிழவர் வேண்டிய ஏற்பாடுகளைச் செய்ய ஆரம்பித்தார். ஆனால் அந்தக் கலியாணத்துக்கு வீரேந்திரன் இணங்கவில்லை. அந்த ஊரில், கணவன், மகன் யாருமற்ற ஒரு விதவையின் பெண்ணை இரகசியமாகக் கலியாணம் செய்து கொண்டு விட்டான். மறுபடியும் கலியாணம் செய்து கொள்ள மறுத்துவிட்டான். கிழவர் கோபாவேசம் கொண்டவராய் மகனை வீட்டை விட்டுத் துரத்தி விட்டார். அவன் வீட்டிலிருந்து வெளியேறி, சைனியத்தில் சேர்ந்து போர் வீரனாக வேண்டுமென்று எண்ணி டில்லியை நோக்கிப் புறப்பட்டான். அப்பொழுது அவனுடைய மனைவி கர்ப்பவதியாக இருந்தாள். ஆகையால் அவளைக்கூடக் கூட்டி கொண்டு போக முடியவில்லை. அவள் தன் தாயாருடன் காலம் கழித்து வந்தாள்.

இவ்வாறு மகன் தேசாந்தரம் சென்றதும் கிழவர் மனத்தில் மகனைப் பிரிந்த மனோவேதனை தலைகாட்ட ஆரம்பித்தது. அவர் பச்சாதாபமுடையவராய் மகனைத் திரும்ப வரவழைப்பதற்காகப் பிரயத்தனம் செய்ய ஆரம்பித்தார். ஆனால் முடியவில்லை. மகனைத் திரும்ப அடைய முடியாமல் அவன் மனைவியை அவள் வசித்த வறிய நிலையுள்ள வீட்டிலிருந்து தம் மாளிகைக்கு அழைத்து வந்து வைத்துக் கொண்டார். காலக்கிரமத்தில் வீரேந்திரனின் மனைவி ஒரு பெண் குழந்தையைப் பெற்றாள். பெற்ற சில நாளில் அவள் இறந்து போனாள்.

டில்லியை அடைந்த வீரேந்திரன் பாதுஷாவின் உத்தரவுப்படி ராஜபுத்திரப் படையில் ஒரு போர் வீரனாக உத்தியோகம் ஏற்றான். தன் குணத்தால் கொஞ்ச காலத்தில் நல்ல பதவிக்கும் வந்தான். அப்படி வீரேந்திரன் கீர்த்தியும் சொத்தும் சம்பாதித்துக் கொண்டிருந்தபோது தன் தகப்பனார் காலகதியடைந்த செய்தியைக் கேள்விப்பட்டான். அதற்குமேல் வேற்றூர் வாசமும் பிறரை அண்டிப் பிழைப்பதும் அவசியமில்லையென்று கருதி ஊருக்குத் திரும்பி வந்து சேர்ந்தான். அவனுடன் டில்லியிலிருந்து சிலர் வந்திருந்தார்கள். அவர்களில் ஒருத்தி

ஒரு வேலைக்காரி; பரமஹம்ஸர் மற்றொருவர். இந்தக் கதைக்காக இவர்கள் இருவருடைய பரிச்சயமும் அவசியமாகிறது. வேலைக்காரியின் பெயர் விமலா என்பது; பரமஹம்ஸரின் பெயர் அபிராமஸ்வாமி என்பது.

விமலா வீட்டு வேலையைக் கவனித்தாள். முக்கியமாக, வீரேந்திரனுடைய தாயில்லாக் குழந்தையை எடுத்து வளர்த்து வருவதில் ஈடுபட்டிருந்தாள். அதைத் தவிர, கோட்டையில் அவள் இருப்பதற்கு வேறு காரணம் இல்லை. அவளை வேலைக்காரியென்றுதான் சொல்ல வேண்டும். ஆனாலும் அவளிடத்தில் வேலைக்காரியின் சின்னம் ஒன்றுமே தென்படவில்லை. வீட்டு யஜமானிக்கு எத்தகைய கௌரவம் கொடுப்பார்களோ அத்தகைய கௌரவத்தை அங்கே இருப்பவர்கள் அவளுக்குக் கொடுத்தார்கள். ஊரிலெல்லோரும் அவளிடம் அன்பு கொண்டிருந்தார்கள். அவளுடைய முகத்திலிருந்த லக்ஷ்மீகரத்திலிருந்தே அவள் யௌவனத்தில் மிக்க ரூபவதியாக இருந்திருக்க வேண்டுமென்று தெரிந்தது. அதிகாலையில் தென்படும் சந்திராஸ்தமனம் போல அவ்வழகியின் சோபை அப்பொழுது அவள் முகத்தில் தங்கியிருந்தது.

அபிராமஸ்வாமியின் சிஷ்யன் கஜபதி வித்தியாதிக்கஜன் என்று ஒருவன் இருந்தான். அவனுக்கு அலங்கார சாஸ்திரம் தெரியுமோ; தெரியாதோ, தன் ரஸிகத் தன்மையைச் சந்தர்ப்பம் வாய்த்த போதெல்லாம் காட்டவேண்டுமென்ற ஆவல் மட்டும் அவனுக்கு அதிகம் உண்டு. அவன் விமலாவின் அபூர்வ சௌந்தரியத்தைப் பற்றி அடிக்கடி வர்ணிப்பான். அதற்காக விமலா வேடிக்கையாக அவனுக்கு ரஸிகராஜரயோபார்த்தியார் என்று பெயர் வைத்தாள்.

அவளுடைய ரூபத்திற்கு ஏற்றவாறு வாக்குச் சாதுரியமும் பழகும் தன்மையும் அமைந்திருந்தன. அவை வெறும் வேலைக்காரியிடம் காண்பதற்கரிய குணங்கள். வெகுகாலம் விமலா மொகலாய அரசரின் அந்தப்புரத்தில் இருந்தாளென்று ஒரு வதந்தி உண்டு. அது நிஜமோ, பொய்யோ, அது விமலாவிற்குத்தான் தெரியும். ஆனால் ஒரு பொழுதும் அவள் அதைப்பற்றிப் பிரஸ்தாபித்ததே இல்லை.

விமலா விதவையோ, என்னவோ என்பதும் ஒருவருக்கும் தெரியாது. அவள் அலங்காரம் செய்து கொண்டாள். ஏகாதசி உபவாஸம் இருக்கவில்லை. சுமங்கலியைப் போலத்தான் எல்லா விஷயங்களிலும் நடந்து கொண்டாள்.

துர்க்கேசநந்தினி – வீரேந்திரன் மகள் – திலோத்தமையிடம் விமலா அந்தரங்கமான அன்பு செலுத்தினாள். அது கோவிலில் அவள் நடந்து கொண்ட மாதிரியிலேயே தெரிந்தது. திலோத்தமையும் விமலாவிடம் அதேமாதிரியான பற்றுக் கொண்டிருந்தாள்.

விரேந்திரசிங்கின் மற்றொரு நண்பராகிய அபிராமஸ்வாமி எப்பொழுதும் கோட்டையிலேயே இருப்பதில்லை. இடையிடையே தேசாடனம் செய்யப் போய்விடுவார். இரண்டு மூன்று மாதம் மாந்தாரணத்திலும் இரண்டு மூன்று மாதம் வெளியே சுற்றுவதிலும் காலங்கழித்தார். ஊராரும் மற்றவரும் அவர் வீரேந்திரசிங்கின் தீக்ஷாகுரு என்று கருதினார்கள். அவன் அவரிடம் கொண்டிருந்த அன்பும் பக்தியும் அப்படித்தான் இருந்தன. காரியக் கிரமங்கள் யாவற்றிலும் அவரே யோசனை கூறிவந்தார்; அவர் யோசனை எப்பொழுதும் திருப்திகரமாகவே நிறைவேறிற்று. உண்மையில் அபிராமஸ்வாமி அதிக முன் யோசனைக்காரர்; கூர்மையான புத்தி சாதுரியம் பெற்றவர். தம் ஆசிரம தர்மத்தையொட்டியே வாழ்க்கை சம்பந்தமான விஷயங்களிலும் சத்துருக்களை அடக்குவதிலும் வெகு சாமர்த்தியமான பயிற்சியுடையவராயிருந்தார். கோபம் முதலியவைகளைத் தவிர்த்து ஸ்திர புத்தியுடன் விஷயாலோசனை செய்வதில் நிபுணராயிருந்தார். வீரேந்திரனோ டாம்பீகன்; சாமர்த்தியமற்றவன்; அங்கே அவர் யோசனை நல்ல பலனுடையதாயிருந்ததென்று சொல்ல வேண்டுமா?

விமலா, அபிராமஸ்வாமி இவர்களைத் தவிர ஆஸ்மானி என்ற ஒரு சேடியும் வீரேந்திரனுடன் டில்லியிருந்து வந்திருந்தாள்.

## ஆறாம் அத்தியாயம்

## அபிராமஸ்வாமியின் யோசனை

திலோத்தமையும் விமலாவும் சைலேசுவர ஸ்வாமி கோவிலிருந்து ஒருவிதமான சங்கடமுமின்றி வீடு திரும்பி வந்து சேர்ந்தார்கள். அதற்கு நாலைந்து நாட்களுக்குப் பிறகு ஒருநாள் வீரேந்திரசிங் தன் சபா மண்டபத்தில் உட்கார்ந்திருந்தபொழுது அபிராமஸ்வாமி அங்கே வந்து சேர்ந்தார். வீரேந்திரசிங் உடனே எழுந்திருந்து அவரை வணங்கினார். சுவாமிகள் அவர் அளித்த ஆசனத்தில் அமர்ந்தார்; அதன்பிறகு வீரேந்திர சிங்கும் உட்கார்ந்தான்.

"வீரேந்திரா! இன்று நான் உன்னிடம் சொல்ல வேண்டிய விசேஷ சமாசாரம் ஒன்று இருக்கிறது" என்றார் அபிராமஸ்வாமி.

"உத்தரவாகட்டுமே!" என்று வீரேந்திரன் கூறினான்.

"இப்பொழுது மொகலாயருக்கும் பட்டாணியருக்கும் பெருத்த யுத்தம் ஏற்படப் போகிறது".

"சரி, அதிலிருந்து என்ன விசேஷமான விளைவு ஏற்படலாமென்று எண்ணுகிறீர்கள்?"

"இப்பொழுது நீ என்ன செய்வதாக உத்தேசித்திருக்கிறாய்?"

"உத்தேசமென்ன இருக்கிறது? சத்துருக்கள் நெருங்கினால் என் புஜபலத்தால் அவர்களை ஜயிப்பேன்" என்று வீரேந்திரன் கர்வத்துடன் சொன்னான்.

அபிராமஸ்வாமி அப்பொழுது சாவதானமாகப் பேச ஆரம்பித்தார்.

"நீ சொன்ன பதில் உன்னைப் போன்ற வீரர்கள் சொல்ல வேண்டிய பதில்தான்; சந்தேகமில்லை. ஆனால் இப்பொழுது விஷயம் எப்படியிருக்கிறது தெரியுமோ? வெறும் வீரத்தால் மட்டும் வெற்றி கிடைக்காது. சமயத்திற்கேற்றவாறு உடன்படிக்கையும் பிரிவினையும் ஏற்படுத்திக் கொண்டால்தான் ஜயம் உண்டாகும் நீ உண்மையில் நல்ல வீரன்தான். ஆனால் உன் சேனை ஆயிரத்திற்குமேல் இல்லை. ஆயிரம் பேரை வைத்துக் கொண்டு நூறு மடங்கு அதிகமான சேனையை எதிர்த்து எவனால் போர் புரிந்து வெற்றி பெற முடியும்? மொகலாயர் சைனியமும் பட்டாணியர் சைனியமும் உன் சேனையைக் காட்டிலும் நூறு மடங்கு அதிகமான பலம் கொண்டவை. ஒரு பக்கத்தின் உதவியின்றி மற்றொரு பக்கத்தின் கையிலிருந்து தப்புவது சாத்தியமில்லை. இப்படிச் சொல்லுகிறேன் என்று நீ கோபம் கொள்ளக்கூடாது. ஆழ்ந்து யோசனை செய்து பார். இன்னொரு விஷயம்; இருவரையும் சத்துருவாக்கிக் கொள்வதிலும் உபயோகமில்லை. சத்துரு தாமதமாயிருந்தால், இருவருடைய சேர்க்கை ஒருவருக்குக் கெடுதல்தானே? ஆகையால் நாம் தீர ஆலோசனை செய்து ஏதாவதொரு பக்கம் சேருவதுதான் உசிதம்".

வீரேந்திரசிங் வெகுநேரம் சும்மா இருந்தான். பிறகு "எந்தப் பக்கம் சேரும்படி உத்தரவாகிறது?" என்றான்.

"'யதோ தர்மஸ்ததோ ஜய:' எந்தப் பக்கத்தில் சேர்ந்தால் தர்மத்திற்கு விரோதமேற்படாதோ அந்தப் பக்கத்தில் சேர். ராஜாவிற்குத் துரோகம் செய்வது மகாபாபம்; ஆகையால் ராஜாவின் பக்கத்தில் சேர்ந்து கொள்".

வீரேந்திரசிங் மறுபடியும் ஒரு கணம் யோசனைச் செய்தான்; "ராஜா யார்? மொகலாயர் பட்டாணியர் இருவருமே அந்தப் பதவிக்காகப் போரிடுகிறார்கள்" என்று கேட்டான்.

"யார் கை மேலிருக்கிறதோ அவரே ராஜா!"

"அக்பர்?"

"நிச்சயமாக!"

அதைக் கேட்டதும் வீரேந்திரசிங்கின் முகம் மாறுதல் அடைந்தது; கண்கள் சிவந்தன. அபிராமஸ்வாமி அந்த முகஜாடையைக் கண்டு, "வீரேந்திரா! கோபத்தை அடக்கிக் கொள். நீ டில்லி பாதுஷாவுடன் சேர வேண்டுமென்றுதான் நான் சொன்னேன்; மான்சிங்கைப் பின்பற்று என்று சொல்லவில்லையே!" என்றார்.

வீரேந்திரசிங் வலது கையில் இடது கை விரலை வைத்துச் சுட்டிக் காட்டி, "உங்களுடைய ஆசீர்வாதம் இருந்தால், இந்தக் கை மான்சிங்கின் ரத்தத்தில் தோயும்" என்றான்.

"முன்கோபம் கொண்டு உன் சொந்தக் காரியத்தில் நஷ்டமடையாதே! மான்சிங் முன் செய்த செய்கைகளுக்கு அவனுக்குத் தண்டனை செய்ய வேண்டியது சரிதான்; ஆனால் அக்பருடன் சண்டை போடுவதில் என்ன உபயோகம்?" என்று அபிராமஸ்வாமி கொஞ்சம் கம்பீரத்தொனியுடன் கூறினார்.

"அக்பரின் பக்கத்தில் இருந்தால் எந்தச் சேனாதிபதியின் கீழ் நின்று யுத்தம் புரிகிறது? எவனுக்கு உதவி செய்கிறது? எவனைப் பின்பற்றிச் செல்லுகிறது? மான்சிங்கையா? குருதேவ! இந்தத் தேகம் இருக்கும் வரை வீரேந்திரசிங்கால் அந்தக் காரியம் செய்ய முடியாது!" என்று வீரேந்திரசிங் கோபத்துடன் மொழிந்தான்.

"அபிராமஸ்வாமி மனவருத்தம் கொண்டு மௌனமாக இருந்தார். கொஞ்சநேரம் கழித்து, ஆனால் பட்டாணியருக்குச் சகாயம் புரிவது நல்லதென்று எண்ணுகிறாயா?" என்று கேட்டார்.

"ஏதாவதொரு பக்கம் சேர்ந்தால்தான் நல்லதா?"

"ஆமாம், சேர்ந்தால்தான் நல்லது".

"அப்படியானால் பட்டாணியருக்குச் சகாயம் செய்வதே நல்லது".

அபிராமஸ்வாமி ஆழ்ந்த பெருமூச்சு விட்டு மறுபடியும் மௌனம் சாதிக்கலானார். அவருடைய கண்களில் கண்ணீர் துளித்தது. அதைக் கண்டதும் வீரேந்திரசிங் ஆச்சரியமடைந்து "குருவே! என்னை மன்னித்தருள வேண்டும்; நான் தெரியாமல் ஏதாவது அபராதம் செய்திருந்தாலும் என்னை மன்னிக்க வேண்டும் என்ன செய்தேன் சொல்லுங்கள்!" என்றான்.

அபிராமஸ்வாமி மேல் வஸ்திரத்தால் கண்ணைத் துடைத்துக் கொண்டு, "கேள்! நான் சில நாளாக ஜோதிஷ சாஸ்திரம் பயின்று வருகிறேன். உன்னைக் காட்டிலும் உன் பெண்ணிடத்தில் எனக்கு அன்பு அதிகம் என்று உனக்கே தெரியும். ஆகையால் அவளுடைய ஜாதக விஷயமாகப் பல கணக்குகள் போட்டு கணனம் செய்திருக்கிறேன்" என்றார்.

வீரேந்திரன் முகம் மாறுதலடைந்தது. ஆவலுடன் பரமஹம்ஸரைப் பார்த்து, "கணனம் செய்து பார்த்ததில் என்ன கண்டீர்கள்?" என்று கேட்டான்.

"மொகலாய சேனாதிபதி காரணமாகத் திலோத்தமைக்கு ஒரு பெரிய ஆபத்து ஏற்படும்" என்று அறிந்தேன்.

வீரேந்திரசிங்கின் முகம் கறுத்து விகாரமடைந்தது. அபிராம ஸ்வாமி அதைக் கவனித்த வண்ணம் மேலே கூறலானார்; "மொகலாயருக்கு விரோதமாக நாம் இருந்தால் அதன் காரணமாகத் திலோத்தமைக்குக் கெடுதல் ஏற்படும். அவர்கள் பக்கம் இருந்தால் ஒன்றும் ஏற்படாது. அதற்காகவேதான் நீ மொகலாயர் பக்கம் சேரவேண்டுமென்று நான் சொன்னேன். இதைச் சொல்லி உன் மனதைப் புண்படுத்த எனக்கு இஷ்டமில்லை. ஆனால் மனிதனின் முயற்றி வீண். தலையெழுத்துப்படி கட்டாயம் நடந்தே தீரும் என்பது தெரிகிறது. இல்லாவிட்டால் இப்பொழுது நீயேன் இப்படி விடாப்பிடியாக இருக்கிறாய்?"

வீரேந்திரன் பேச்சற்றுப் போனான். அபிராமஸ்வாமி மேலும் பேசலானார். "வாசலில் கத்லுகானின் தூதன் காத்துக் கொண்டிருக்கிறான். அவனைப் பார்த்துக் கொண்டுதான் நான் உன்னிடம் வந்தேன். நான் தடுத்துவிட்டதால்தான் உன் சேவகர்கள் அவனை இதுவரை உள்ளே விடாமல் நிறுத்தி வைத்துக் கொண்டிருக்கிறார்கள் இப்பொழுது நான் சொல்ல வேண்டியதைச் சொல்லியாகிவிட்டது. தூதனைக் கூப்பிட்டு உசிதமான பதிலைச் சொல்லியனுப்பு".

வீரேந்திரன் பெருமூச்சுடன் தலையை ஆட்டிக் கொண்டு, "குருதேவா! எதுவரை நான் திலோத்தமையைப் பாராமலிருந்தேனோ அதுவரை பெண்ணென்று அவளைப் பற்றி நான் எண்ணினதுகூடக் கிடையாது இப்பொழுது திலோத்தமையை விட்டால் எனக்கு வாழ்க்கையில் வேறொன்றுமே கிடையாது. உங்கள் ஆக்ஞையைத் தலைமேல் ஏற்கிறேன். இன்று முதல் சென்று போனதைத் தூரத் தள்ளிவிடுகிறேன். மான்சிங்குடன் சேர்ந்து கொள்ளுகிறேன். வாசலில் இருக்கும் தூதனை வரவழையுங்கள்" என்றார்.

ஆக்ஞைப்படி அபிராமஸ்வாமி வெளியே இருந்த தூதனை வரவழைத்தார். தூதன் கத்லுகான் அனுப்பியிருந்த கடிதத்தைக் கொடுத்தான். கடிதத்தில் கண்டிருந்தது இதுதான்: "வீரேந்திரசிங் ஆயிரம் போர்க் குதிரை வீரர்களையும், ஐந்நூறு மோகராக்களையும் பட்டாணிய முகாமிற்கு அனுப்ப வேண்டும். தவறினால் கத்லுகான் இருபதினாயிரம் பேர் அடங்கிய சேனையை மாந்தாரணக் கோட்டைக்கு அனுப்ப வேண்டியிருக்கும்".

அதை வாசித்து வீரேந்திரன் தூதனிடம், "தூதா! அவரே சேனையை அனுப்பலாமென்று உன் யஜமானனிடம் தெரிவி" என்று சொன்னார். தூதன் தலைவணங்கி வெளியேறினான்.

இதையெல்லாம் ஆதியோடந்தமாக விமலா மறைந்து நின்று கேட்டுக் கொண்டிருந்தாள்.

## ஏழாம் அத்தியாயம்

## அமைதியின்மை

ஆமோதர நதி கோட்டையின் அடிப்பாகத்தைத் தொட்டு அலசி சலசலவென்று சத்தம் செய்து கொண்டு போன இடத்தில் ஒரு பக்கத்து ஜன்னலில் இருந்து கொண்டு திலோத்தமை நதிப் பிரவாகத்தில் ஏற்பட்ட சுழல்களைப் பார்த்துக் கொண்டிருந்தாள். சாயங்கால வேளை. மேல் வானத்தில் இருந்த மேகங்கள் எல்லாம் அஸ்தமிக்கும் சூரியனின் மெலிந்த கிரணங்களுடைய சேர்க்கையால் பசும்பொன்னின் காந்தியைப் பெற்று விளங்கின. அவைகளுடன்கூடிய நீல ஆகாயம் நதிப்பிரவாகத்தில் நிழலடித்து, ஓடும் ஜலத்தில் ஆடிக் கொண்டே இருந்தது. நதியின் கரையில் நின்ற மாளிகையும் உயர்ந்த மரங்களும் சுத்த ஆகாயமான திரையில் வரையப்பட்ட சித்திரங்களைப் போலத் தென்பட்டன. கோட்டைக்குள், அழகிய கழுத்துக்களையுடைய மயில், சாரஸம் முதலிய பட்சிகள் மலர்ந்த உள்ளத்துடன் கத்திக் கொண்டிருந்தன. இரவு ஆரம்பித்துவிட்டதென்று, எங்கெங்கோ இரைதேடச் சென்றிருந்த பட்சிகள் சத்தம் செய்யாமல் ஆகாயத்தில் பறந்து வந்து கொண்டிருந்தன. மாந்தோப்பிலிருந்து பிறந்து வந்த கோடைக்காலத்துக் காற்று ஆமோதரத்தின் ஜலத்தின் குளிர்ச்சி பெற்றுவந்து திலோத்தமையின் தலைமயிரையும் தோளின் மீதிருந்த அழகிய ஆடையையும் அசைத்துக் கொண்டிருந்தது

திலோத்தமை நல்ல அழகி. அவளுடைய அழகைப் பார்த்து விவரிக்க முயலுவோம். ஆனால் அப்போ்ப்பட்ட பேரழகு பொருந்திய உருவத்தை எப்படி வா்ணிப்பது? பாலியத்தில், எப்பொழுதாவது, நிமிர்ந்த நேர் நடை கொண்ட ஒரு மெல்லிய உருவத்தை, பெண்ணின் புது எழில் படர்ந்த மேனியை, ஆசைக் கண்களுடன் பார்த்திருக்கிறீர்களா? ஒரு தடவை மட்டும் பார்த்தாலே போதும். ஆயுள் முழுவதும் அதன் மாதுரியத்தை மறக்க முடியாது. பாலியத்தில், யௌவனத்தில், நடுவயதில், வேலையின் நடுவில், ஓய்வில், விழிப்பில், தூக்கத்தில் – எல்லா நிகழ்ச்சிகளிலும் இடைவிடாமல் அந்த மனமோகன ரூபம் நினைப்புப் பாதையில் கனவு போல வந்து கொண்டே இருக்கும். அதன் சம்பந்தமாக எப்பொழுதும் மனத்தில் சலிப்பே தோன்றாது.

அப்போ்ப்பட்ட பருவப் பெண்ணைப் பார்த்ததுண்டா? பார்த்திருந்தால் அப்பொழுது திலோத்தமையின் அவயங்களை மனத்தில் உருப்படுத்திப் பார்த்து அனுபவிக்கலாம். சில உருவங்கள் சௌந்தரியத்தின் ஒளிப்பெருக்கில் மனதை ஜுவாலை கொள்ளச் செய்கின்றன; துள்ளி விளையாடும் லாவண்ணியத்தின் மதுமயக்கத்திலே சில, உள்ளத்தில் சர்ப்பம் தீண்டியது போன்ற வேதனையைக் கிளப்புகின்றன. அத்தகைய உருவம் அன்று திலோத்தமையுடையது அது மிருது மாதுரியப் பெருக்கில் மனத்தில் நிறைவை நிறுவும் ரூபம். அது, மாலையின் மெல்லென்ற காற்றில் அசையும் இளவேனிற் கொடியைப் போல நினைவில் உலவும்.

திலோத்தமைக்கு வயது பதினாறு. தேக அமைப்பு வயதடைந்த பெண்ணின் பூரிப்பை இன்னும் அடையவில்லை. தேகக் கட்டிலும் முகம், மற்ற அவயவங்களாகியவற்றின் தோற்றத்திலும் இன்னும் சிறு பெண்ணின் தன்மையே தென்பட்டது. நன்றாக அமைந்த நேர்த்தியான நெற்றி மிகவும் சிலாக்கியமானதும் அல்ல, அதிகமாகச் சிலாகிக்கத்தகாததுமன்று. இராத்திரி காலத்தில் நிலவால் விளக்கப் பெற்ற நதியைப் போலக் குளிர்ச்சியும் பிரகாசமும் கொண்டிருந்தது. அதன் பக்கத்தில் கறுத்த தேகம் நிறைந்த இரு புருவங்கள், அழகிய கன்னங்கள், கழுத்து, தோள்கள்; இருள் மூண்டது போன்றிருந்த கூந்தலை முத்துமாலையைக் கொண்டு அழகாகக் கட்டியிருந்தாள். வாசகருக்கு ஒரு வேளை மருண்ட பார்வையுடைய விழிகள்தான் பிடிக்குமோ? அப்படியானால் திலோத்தமை உங்களுடைய மனோரஞ்சனியாக இருக்க முடியாது. திலோத்தமையின் கண்கள் மிகவும் சாந்தமானவை; மின் ஒளியின் மினுக்குடன் பாயும் கடைக்கண் பார்வை அவளிடம் இல்லை. இரண்டு கண்களும் சாந்தயோதி நிரம்பியவை. கண்ணின் வர்ணம், காலையில் சூரியோதயத்திற்குக் கொஞ்சம் முன்பு சந்திரன் அஸ்தமனம் ஆகும் சமயத்தில் தென்படும் கருமையைக் கொண்டிருந்தது. அக்கண்களுடன் அவள் பார்க்கும் பொழுது அதில் திருட்டுத்தனம் ஒன்றும் தோன்றாது. திலோத்தமைக்குக் கடைக்கண்ணின் அரைப் பார்வையே தெரியாது. அவள் பார்வையில் தெளிவும் சரள பாவமுந்தான் இருக்கும்; அதே சரளபாவம் கொண்டது அவள் மனதும். அவள் தரையைத் தவிர வேறெங்கும் பார்வையைச் செலுத்துவதில்லை. அவளுடைய இதழ்கள் புன்னகை பெற்றெடுக்கும் இரண்டு இன்பங்கள். அவள் சிரிப்பதை ஒருதரம் பார்த்துவிட்டால் போதும். அவன் யோகியானாலும் முனியானாலும் கிழவனானாலும் அதை அவனால் மறக்கவே முடியாது அச்சிரிப்பிலும் அந்தச் சரள குணமும் சிறு பெண்ணின் தூய்மையும்தான் காணப்படும். வெறொன்றும் தென்படாது.

திலோத்தமையின் தேக அமைப்பு அழகாயிருந்தபோதிலும் அதில் புஷ்டி இல்லை. அவளுடைய இயற்கையான வளர்ச்சியே அப்படித்தான் போலும். ஆனாலும் அப்பூங்கொடியின் தேகத்தில் எல்லா அவயவங்களும் மிருதுவாகவும் உருண்டு திரண்டுந்தான் இருந்தன. உருண்ட கைகளில் வைரங்கள் பதித்த வளையல்கள்; உருண்ட திரண்ட விரல்களில் மோதிரங்கள்; அழகிய இடையில் ஒட்டியாணம்; நன்றாய் அமைந்த தோள்களில்

தங்கச்சங்கிலிகள்; கழுத்தில் ரத்தின கண்டி; இப்படியாக அவளிடத்தில் இயற்கையிலும் செயற்கையிலும் அழகு சொட்டிற்று.

திலோத்தமை அந்த ஜன்னலடியே தனியாக என்ன செய்து கொண்டிருந்தாள்? சாயங்கால வானத்தின் சோபையைப் பார்த்துக் கொண்டிருந்தாளா? அப்படியானால் அவளுடைய கண்கள் ஏன் கீழ் நோக்கியிருந்தன? நதிக்கரையில் பூத்திருந்த புஷ்பங்களின் வாசனை நிறைந்திருந்த காற்றை அனுபவித்துக் கொண்டிருந்தாளா? அப்படியானால் நெற்றியில் சிறுசிறு துளிகளாக வியர்வை துளிப்பானேன்? முகத்தின் ஒரு பாகத்தை விட்டவிட்டுக் காற்று அடிக்குமா? மாடு மேய்வதைக் கவனித்தாளா? அதுவுமல்ல; அவை எல்லாம் வீடு திரும்பிவிட்டன. குயிலின் இனிய குரலைக் கேட்டுக் கொண்டிருந்தாளா? அப்படியானால் முகம் ஏன் அப்படி வாடியிருந்தது. திலோத்தமை ஒன்றையும் கேட்கவில்லை; ஒன்றையும் பார்க்கவில்லை; யோசனையில் ஆழ்ந்திருந்தாள்.

வேலைக்காரி விளக்கேற்றிக் கொண்டு வந்தாள். திலோத்தமை தன் நினைவையடைந்து ஒரு புத்தகத்தை எடுத்துக் கொண்டு விளக்கடியில் வந்து உட்கார்ந்தாள். திலோத்தமைக்கு நன்றாகப் படிக்கத் தெரியும்; அபிராமஸ்வாமி அவளுக்கு சமஸ்கிருதம் கற்றுக் கொடுத்திருந்தார். அவள் கையிலிருந்த புத்தகம் காதம்பரி. கொஞ்சநேரம் படித்தாள்; பிடிக்கவில்லை. காதம்பரியைத் தூர வைத்தாள். சுபந்து எழுதிய வாஸவதத்தா என்ற புத்தகத்தை எடுத்துப் படித்தாள். படிப்பு எங்கோ, மனம் எங்கோ. கொஞ்சம் படிப்பாள்; மனம் எங்கோ செல்லும். வாஸ்வதத்தையும் பிடிக்கவில்லை; அதையும் கீழே வைத்துவிட்டுக் கீத கோவிந்தத்தைப் படிக்க ஆரம்பித்தாள். கீத கோவிந்தம் கொஞ்ச நேரத்திற்கு நன்றாகத்தான் இருந்தது. படிக்கப் படிக்கக் கொஞ்சம் லஜ்ஜையுண்டாயிற்று; சிரித்துக் கொண்டே கொஞ்சம் படித்தாள். அதையும் கடைசியாகக் கீழே எறிந்தாள். ஒன்றும் செய்யாமல் படுக்கையின்மேல் சாய்ந்து கொண்டாள்; அருகே ஒரு பேனாவும் மைக்கூடம் இருந்தன. வேறு ஏதோ எண்ணிக் கொண்டு அதையெடுத்துப் பக்கத்திலிருந்த பலகையில் க, ஸ, ம, வீடு, வாசல், மனிதன் - இந்த மாதிரி சொற்களை எழுத ஆரம்பித்தாள். பலகையில் இடம் இல்லாமல் போனபொழுதுதான் என்ன எழுதியிருக்கிறோம் என்று பார்த்தாள். வாஸவதத்தா மஹாசுவேதை க, இ, ப, ஒரு உருவம், சிவன், கீதகோவிந்தம், விமலா மாந்தாரணம் முதலியவைகளை எழுதியிருந்தாள். அதைப் படித்துச் சிரித்தாள். ஐயையோ! வேறொன்றுகூட எழுதியிருந்தாள்:

"குமார ஜகத்சிங்!"

வெட்கத்தால் திலோத்தமையின் முகம் சிவந்தது. எதற்காக வெட்கம்.

"குமார ஜகத்சிங்!" திலோத்தமை ஒரு தடவை, இரண்டு தடவை, பல தடவை அதைப் படித்தாள். வாசற் பக்கத்தைப் பார்த்துக் கொண்டு மறுபடியும் படித்தாள்; மறுபடியும் பார்த்தாள்; படித்தாள் - இம்மாதிரி மனதில் திருட்டுத்தனம் செய்து கொண்டிருந்தாள்.

வெகுநேரம் படித்துக் கொண்டிருக்க அவளுக்குத் தைரியமில்லை. யாராவது வந்து பார்த்துவிடுவார்களோ என்று பயம். உடனே ஜலம் கொண்டு வந்து அந்தப் பெயரின் எழுத்துக்களை அழித்தாள்; அதிலும் திருப்தி ஏற்படவில்லை. துணியெடுத்துத் துடைத்தாள். மறுபடியும் படித்துப் பார்த்தாள். கறுப்பு அடையாளம் கொஞ்சம்கூட இல்லை. அப்படியிருந்தும் அதைப் படிக்க முடிந்தது. மறுபடியும் ஜலம் கொண்டுவந்து அழித்தாள்; மறுபடியும் துணி போட்டுத் துடைத்தாள். அப்பொழுது

"குமார ஜகத்சிங்"

என்ற எழுத்துக்கள் அங்கேயே இருந்ததாக அவள் கண்களில் பட்டது.

## எட்டாம் அத்தியாயம்

## விமலாவின் யோசனை

விமலா அபிராமஸ்வாமியின் குடிசையில் அவரை வணங்கி நின்றாள் அவர் யோகாசனத்தில் அமர்ந்திருந்தார். ஜகத்சிங்கிற்கும் தனக்கும் திலோத்தமைக்கும் கோவிலில் ஏற்பட்ட சந்திப்பைப் பற்றி அவள் அபிராமஸ்வாமியிடம் முழுவதுமாகச் சொன்னாள். சொல்லி முடித்துவிட்டு, "இன்று பதினாலாவது நாள்; நாளை ஒரு பக்ஷமாகி விடும்" என்றாள்.

"இப்பொழுது என்ன யோசனை செய்திருக்கிறாய்?" என்று அபிராமஸ்வாமி கேட்டார்.

"அதைப் பற்றி உங்கள் யோசனையைக் கேட்கத்தான் நான் இங்கே வந்திருக்கிறேன்."

"நல்லது. என் யோசனை இதுதான்; இந்த விஷயத்தைப் பற்றி இனிமேல் ஒன்றும் செய்யாதே."

விமலா மனக்கவலை கொண்டவளாய் மௌனமாக இருந்தாள்.

"எதற்காக வருத்தப்படுகிறாய்?" என்று அபிராமஸ்வாமி கேட்டார்.

"திலோத்தமைக்கு ஏதாவதொரு வழி செய்தாக வேண்டும்".

"என்ன! திலோத்தமை மனதில் ஏதாவது காதல் பிரமை ஏற்பட்டிருக்கிறதா?" என்று ஸ்வாமி ஆச்சரியத்துடன் கேட்டார்.

விமலா கொஞ்ச நேரம் வாயை மூடிக் கொண்டு இருந்தாள்.

"உங்களிடம் சொல்லியாக வேண்டியதுதான். இந்தப் பத்துப் பதினைந்து நாளாக இரவும் பகலுமாக நான் திலோத்தமையைக் கவனித்து வருகிறேன். அவள் ஆழ்ந்த காதலால் பீடிக்கப்பட்டு இருக்கிறாள்" என்றாள் கடைசியாக.

அபிராமஸ்வாமி கொஞ்சம் சிரித்துக் கொண்டு, "நீங்கள் பெண்கள்; மனதில் ஏதாவதொரு லேசான சஞ்சலம் ஏற்பட்டாலும் அதை உடனே ஆழ்ந்த காதல் என்று எண்ணி விடுகிறீர்கள். திலோத்தமையின் மனதில் இருப்பது சிறு பெண் சுபாவத்திற்குச் சகஜமானதுதான். முதல் முதல் பார்க்கிறபொழுது அந்த மாதிரிதான் மனது சஞ்சலப்படும். அந்த விஷயமாக ஒன்றும் அதிகமாக விஸ்தரிக்காமல் இருந்தால் சீக்கிரத்தில் ஜகத்சிங்கை மறந்து விடுவாள்" என்றார்.

"பிரபோ, அப்படியில்லை; அப்படி மேலெழுந்தாற்போன்ற சஞ்சலம் அன்று அவளுடையது. இந்தப் பதினைந்து நாட்களுக்குள்ளேயே திலோத்தமையின் சுபாவம் மாறிப் போய் விட்டது. முன்போல, என்னுடனோ தோழிகளுடனோ அவள் சிரித்துக் கொண்டு பேசுவதே இல்லை. ஒரு பேச்சும் பேசுவதே கிடையாது. அவளுடைய புத்தகங்களெல்லாம் கவனிக்கப்படாமல் கிடக்கின்றன. அவளுடைய பூச்செடிகளெல்லாம் ஜலமின்றி வாடுகின்றன. பக்ஷிகளையும் முன்போல் அவள் கவனிப்பதில்லை. அவள் சரியாக ஆகாரங்கூடச் செய்வதில்லை. இரவில் தூங்குவதில்லை. அலங்கரித்துக் கொள்வதில்லை. அவள் இப்பொழுது எதைப் பற்றியும் யோசிப்பதில்லை. இரவும் பகலும் வேறு நினைவாகவே இருக்கிறாள். அவள் முகம் கருத்துவிட்டது".

இதைக்கேட்டு அபிராமஸ்வாமி சும்மா இருந்தார். கொஞ்சநேரம் கழித்து, "கண்டதும் காதல் என்பது நடக்கக்கூடாத சமாசாரம் என்று நினைத்தேன். ஆனால் பெண்கள் விஷயம், அதுவும் சிறு பெண்கள் விஷயம், யாருக்குத் தெரியும்? ஆனால், வீரேந்திரன் இந்தச் சம்பந்தத்திற்கும் சம்மதப்படமாட்டானே, என்ன செய்கிறது?" என்றார்.

"அதே சந்தேகத்தால்தான் நான் இதுவரையில் இதை யாரிடமும் சொல்லாமல் இருந்தேன்; ஆனால் இப்பொழுது யஜமானர் இதைச் சொல்லும்பொழுது வேறெதோ எண்ணம் தோன்றி, இப்பொழுது யஜமானர் மான்சிங்குடன் சிநேகம் செய்து கொண்டால், ஜகத்சிங்கை மாப்பிள்ளையாக்கிக் கொள்வதில் என்ன தப்பு?" என்றாள் விமலா.

"மான்சிங் சம்மதப்படுவானா?"

"சம்மதப்படாவிட்டால், யுவராஜன்தானே செய்து கொள்ளுகிறான், தன்னிஷ்டப்படி!"

"ஜகத்சிங் வீரேந்திரசிங்கின் மகளைக் கலியாணம் செய்து கொள்வானோ?"

"ஒரு பக்கத்திலும் ஜாதி குல தோஷம் இல்லையே! ஜகத்சிங்கின் முன்னோர்களும் யதுவம்சத்தினர்களேயல்லவா?"

"யது வம்சத்துப் பெண் முஸல்மானின் மாமன் மகனைக் கலியாணம் செய்து கொள்வதா?"

விமலா அலட்சியமாக, "அதனாலென்ன?" என்றாள்.

இதைக் கேட்டதும் அபிராமஸ்வாமிக்குக் கோபம் பொங்கியது. கண்களிலிருந்து நெருப்புப் பொறி பறக்க, "பாவி, உன் கதியை நீ மறந்தாயா? போ அப்புறம்!" என்றார்.

## ஒன்பதாம் அத்தியாயம்

## குலதிலகம்

ஜகத்சிங் பிதாவிடம் விடை பெற்றுக் கொண்டு போய்ச் சிறு சைனியத்துடன் செய்த ஒவ்வொரு செயலும் பட்டாணியர் சைனியத்திற்குப் பீதியை உண்டாக்கிற்று. ஐயாயிரம் பேர் அடங்கிய சைனியத்தை வைத்துக் கொண்டு கத்லுகானின் ஐம்பதினாயிரம் சுவர்ணரேகா நதியின் அக்கரையிலேயே நிறுத்தி விடுவதாக ஜகத்சிங் பிரதிக்ஞை செய்தான். அந்தப்படி காரியத்தைச் செய்து முடிப்பது முடியாமற் போனாலும், அந்த இரண்டு வார காலத்திற்குள், அவன் செய்த செயல்கள் காதில் பட்டதும், தன் புத்திரன் மூலமாக மறைந்து போன ராஜபுத்திரர்களின் பெயரும் கௌரவமும் தலை தூக்கி விட்டன என்று மான்சிங் எண்ணினார்.

ஐயாயிரம் பேர் அடங்கிய படையுடன் ஐம்பதினாயிரம் பேர் அடங்கிய படையைப் போரில் எதிர்த்து வெல்வது என்பது ஒரு விதத்திலும் சாத்தியமில்லை என்பதை ஜகத்சிங் நன்றாக அறிந்திருந்தான்; தோல்வியோ அல்லது மரணமோ நிச்சயம். ஆகையால்தான் நேர்முகமான யுத்தத்தைத் தவிர்த்து, எப்படிச் செய்தால் நேரிடையான யுத்தத்தைத் தடுக்கலாமோ அம்மாதிரியான போர் முறைகளை அனுசரித்தான். அவன் தன் சிறிய சேனையை ஒருமறைவான இடத்தில் ஒளித்து வைத்திருந்தான். அடர்ந்த காட்டிலும், அல்லது சமுத்திரத்தின் அலைபோல எங்கே பூமி உயர்ந்தும் தாழ்ந்தும் இருந்ததோ அதன் அதன் மத்தியிலும் அருகே வந்தாலும்கூடப் பார்க்க முடியாமலிருக்கும் வசதிபெற்ற இடத்திலும் அதை அமர்த்திக் கொண்டான். இப்படி மறைந்திருந்து கொண்டு, எப்பொழுது கொஞ்சம் பட்டாணியர் துருப்புகள் கண்ணில் பட்டதோ அப்பொழுதே திடீரென்று அலைபோலக் கிளம்பி அவர்களின்மேல் சைனியத்துடன் பாய்ந்து அவர்களை ஒரே அடியாக நிர்மூலமாக்கி விடுவான்.

அவனுக்குப் பல வேவுகாரர்கள் இருந்தார்கள். அவர்கள் காய் கறி மீன் விற்பவர் போலவும், பிச்சைக்காரர் போலவும், திக்கற்றவர்கள் போலவும், பிராமணர் போலவும், வைத்தியர் போலவும் அநேக இடங்களில் சஞ்சரித்துப் பட்டாணியர் முன்னேற்றம், பிரயாணம் முதலியவைகளைப் பற்றித் தகவல்கள் கொண்டு வந்து கொண்டே இருந்தார்கள்.

செய்தி கிடைத்தவுடனேயே, ஜகத்சிங் அமைதியுடனும், வேகமாகவும் வரும் பட்டாணிய சேனையை எவ்விடத்திலிருந்தால் சாதுரியமாகவும் எதிர்பாராமலும் தாக்கலாமோ அந்த மாதிரி இடத்தில் தன் சேனையை அமைத்துக் கொள்வான். பட்டாணிய சைனியத்தின் பலம் அதிகமாக இருந்தால் அவர்களைத் தாக்க ஜகத்சிங் யாதொரு முயற்சியும் செய்யமாட்டான். ஏனெனில் அப்பொழுதிருந்த நிலைமையில் ஒரு தரம் தோல்வி அடைந்தாலும் எல்லாம் வீணாகிப் போகுமென்று அவனுக்குத் தெரியும் பட்டாணிய சைனியத்தை அந்த மாதிரியான சந்தர்ப்பத்தில், முன்னே போக விட்டு, மெள்ள அவர்கள் பின்னாலேயே சென்று, அவர்களுடைய பணம், குதிரைகள் முதலியவைகளை அபகரித்து எடுத்து வந்துவிடுவான்.

அப்படிப் பட்டாணிய சைனியம் பிரபலமானதாக இல்லாமல் சிறிதாக இருந்தால், அந்தச் சைனியம் தனக்குச் சௌகரியமான இடத்திற்கு வரும்வரையில் பதுங்கிக் காத்திருந்து, சரியான சமயம் வந்ததும், பசி கொண்ட புலிபோலக் கர்ஜித்துக் கொண்டு அதன்மேல் பாய்ந்து, அந்தத் துர்ப்பாக்கிய சேனையைத் துண்டம் துண்டமாக வெட்டி வீழ்த்திவிடுவான். அந்த நிலைமையில் பட்டாணியர், சத்துருக்கள் பக்கத்தில் இருப்பதை அறியாதவர்களாதலால் யுத்தத்திற்குத் தயாராய் இருக்கமாட்டார்கள். திடீரென்று எதிரி கையில் அகப்பட்டுச் சண்டைகூடச் செய்யாமல் மடிவார்கள்.

இந்த மாதிரி பட்டாணிய சைனியம் பல நாசமாயின. பட்டாணியர் மிகவும் கலவரமடைந்து, நேர்முகமான சண்டையில் ஜகத்சிங்கின் சேனையை நாசம் செய்ய வேண்டுமென்று விசேஷப் பிரயத்தினங்கள் செய்ய ஆரம்பித்தார்கள். ஆனால் ஜகத்சிங்கின் சைனியம் எங்கே இருந்ததென்பதையே அவர்களால் கண்டுபிடிக்க முடியவில்லை. பட்டாணியர் சாக வேண்டிய சமயத்தில், ராஜபுத்திரர்கள் யமபடர்கள் போலத் தோன்றினார்கள்; சம்ஹார வேலையை முடித்துவிட்டு அந்தர்த்தானம் ஆகிவிட்டார்கள்.

ஜகத்சிங் கெட்டிக்காரன்; அவன் தன் ஐயாயிரம் பேரையும் ஒரே இடத்தில் வைத்துக் கொள்ளவில்லை. ஓரிடத்தில் ஆயிரம் பேர், மற்றோர் இடத்தில் ஐந்நூறு பேர், வேறொர் இடத்தில் இருநூறு பேர் - இந்த மாதிரி பிரிவு பிரிவாக, எங்கே எதிரிகள் தோன்றினார்களோ அங்கே அனுப்பிக் கொண்டிருந்தான். ராஜபுத்திரர்கள் எங்கே இருந்தார்கள், எங்கே இல்லை என்பதையே பட்டாணியரால் அறிய முடியவில்லை. சேனை நாசமாகும் இந்தச் செய்தி கத்லுகானுக்கு எட்டிற்று. காலை, மத்தியமானம், மாலை எல்லா வேளைகளிலும் துக்கச் செய்தி வந்து கொண்டே இருந்தது. அதன் காரணமாக, பட்டாணியரின் சிறிதளவுச் சேனை கோட்டையிலிருந்து வெளிவர முடியாமல் போய்விட்டது. ஒரு விதமாகக் கொள்ளையடிப்பதும் சூறையாடுவதும் நின்றன. சேனை முழுவதும் கோட்டைக்குள் அடங்கிவிட்டது. அதிகமான உணவுப் பொருளை வெளியிலிருந்து கொண்டு வருவதுகூடக் கடினமாகி விட்டது.

சத்துருவால் ஆக்கிரமிக்கப்பட்டு வந்த பிரதேசத்தில் ஏற்பட்ட இப்பேர்ப்பட்ட நிலைமையைப் பற்றிக் கேட்டதும் மகாராஜா மான்சிங் தன் மகனுக்கு பின்வருமாறு கடிதம் அனுப்பினார்:-

"குல திலகமே! உன்னால் பட்டாணியர்களை அழித்து விட முடியுமென்று அறிகிறேன். ஆகையால் உன் உதவிக்காக இன்னும் பதினாயிரம் பேர் அடங்கிய சேனையை உனக்கு அனுப்புகிறேன்".

யுவராஜா பின்வருமாறு பதில் அனுப்பினான்:

"மகாராஜாவின் இம்மாதிரி அபிப்பிராயமும் சேனை அனுப்புவதும் எனக்கு மகிழ்ச்சியளிக்கின்றன. இல்லாவிட்டாலும், மகாராஜா ஆசீர்வாதமிருந்தால், க்ஷத்திரியர்களுக்கு ஏற்பட்ட கடமைப்படி என் பிரதிக்ஞையை நிறைவேற்றித் தீருவேன்".

ஜகத்சிங் வீர மதத்தில் வெறி கொண்டு வெற்றி பெற ஆரம்பித்தான்.

சைலேசுவரா! உன் கோவிலில் ஓர் அழகியின் சாந்தப் பார்வையால் தோல்வியடைந்த ஒரு வீரன் சேனையின் கோலாகலத்தின் மத்தியிலும் அவளைப் பற்றி ஒரு தடவையாவது நினைக்காமல் இருப்பானா? அப்படி அவன் மனத்தில் அவள் எண்ணமே ஏற்படவில்லையென்றால் அவனும் உன்னைப் போல் கல்தான்.

## பத்தாம் அத்தியாயம்

## யோசனைக்குப் பிறகு வேலை

அபிராமஸ்வாமி விமலாவைக் கோபித்துக் கொண்டு 'வெளியே போ!' என்று சொன்ன மறுநாட் காலை. விமலா தன் அறையில் தன்னை ஆடையாபரணங்களால் அலங்கரித்துக் கொண்டிருந்தாள். இருபத்தைந்து வயதுப் பெண் போல அலங்கரித்துக் கொண்டாள்! ஏன் செய்து கொள்ளக்கூடாதா? வயதாகிவிட்டால் யௌவனம் போய் விடுமா? உருவத்திலும் மனத்திலும்தான் யௌவனங் இருக்கிறது. எவளுக்கு ரூபம் இல்லையோ அவள் எப்பொழுதும் இருபது வயது அதிகமாகவே ஆன கிழவிதான். எவளுக்கு ரூபம் இருக்கிறதோ அவள் எந்த வயதிலும் யுவதிதான். மனதில் உணர்ச்சி இல்லாதவள் கிழவி; மனதில் உணர்ச்சி பொங்கிக் கொண்டிருந்தால் அவள் சதா யுவதிதான். விமலா இன்று அழகுடனும் உணர்ச்சியுடனும் கூடியிருந்தாள். வாசகர், ஒருவேளை வயதானவராயிருந்தால் இந்த விஷயத்தைக் கட்டாயம் ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும்.

விமலாவின் வெற்றிலைக் காவியேறிய உதடுகளைக் கண்ட பிறகு, யார் அவளை யுவதியல்ல என்று சொல்லக்கூடும்? அவளுடைய சஞ்சலிக்கும் கண் பார்வைகளைக் கண்டு யார் அவளுடைய இருபத்துநான்கு வயதிற்கு மேலிருக்குமென்று சொல்ல முன் வருவார்கள்? என்ன கண்கள்? அவை நீண்டு குருகுருவென்று இருந்தன; அவை ததும்பிற்று. சில வயது வந்த பெண்களின் கண்களிலிருந்தே இவள் மிதப்பு கொண்டவள், இவள் இன்பச் சோர்வு நிறைந்தவள் என்று சொல்லிவிடலாம். விமலாவின் கண்கள் அப்பேர்ப்பட்டவை. விமலா யுவதியென்று வாசகருக்கு நான் நிச்சயமாகச் சொல்லுகிறேன். யௌவனம் மாறாதவள் என்றுகூடச் சொல்ல மடியும். சண்பகமலரின் வர்ணத்தையொத்த அவள் மேனியின் மிருதுத்தன்மையைப் பார்த்தால் அவள் பதினாறு வயதுள்ள கோமளாங்கியென்றுதான் சொல்லுவார்கள். தலை மயிரின் சிறுசுருள் ஒன்று வளைந்து காதின் பின்னாலிருந்து மெதுவாகக் கன்னத்தில் வந்து விழுந்திருந்தது. அதைப் பார்த்தவர்களில் யார்தான், யுவதியின் கேசபாசம் அவளது கன்னத்தில் தொங்குகிறது என்று சொல்லாமல் இருக்க முடியும்? வாசகர் கொஞ்சம் மனக்கண்ணைத் திறந்து பார்க்க வேண்டும். விமலா கண்ணாடியின் முன்பு நின்று கொண்டு தலைமயிரை அழகுபடுத்துகிறாள்; தன் ரூபத்தைப் பார்த்துச் சிரித்துக் கொள்ளுகிறாள்; நடுநடுவே வீணையைப் பழிக்கும் குரலில் மெள்ள மெள்ளப் பாடுகிறாள். விமலா ஒரு யுவதிதானே? அவள் உங்கள் மனத்தைக் கொள்ளை கொள்ளவில்லையா?

தலையை வாரிக் கொண்டவள் மயிரை எடுத்துக் கட்டிக் கொள்ளவில்லை. அது பின் பக்கம் தொங்கிக் கொண்டிருந்தது. அவள் வாசனை ஏற்றிய உருமாலைக் கொண்டு முகத்தைத் துடைத்துக் கொண்டாள். மறுபடியும், பச்சைக் கர்ப்பூரம் முதலியன கலந்த தாம்பூலத்தைத் தரித்துக் கொண்டாள். முத்துக் கட்டிய தங்கச் சங்கிலியைக் கழுத்தில் அணிந்து கொண்டாள். எல்லா அங்கங்களிலும் இரத்தினாபரணங்களை அணிந்தாள். மறுபடியும் ஏதோ யோசித்துச் சிலவற்றைக் கழற்றினாள். அழகிய புதுச்சேலை ஒன்றை எடுத்து உடுத்திக் கொண்டாள். முத்துக்கள் பதித்த இரண்டு கால்ஜோடுகள் போட்டுக் கொண்டாள். ஜகத்சிங் கொடுத்த விலையுயர்ந்த முத்துமாலையையும் அணிந்து கொண்டாள்.

அலங்காரம் செய்து கொண்டபின் விமலா திலோத்தமையின் அறைக்குச் சென்றாள். அவளைக் கண்டு ஆச்சரியமடைந்த திலோத்தமை, "இதென்ன விமலா? இந்த வேஷம் எதற்கு?" என்று சிரித்துக் கொண்டு கேட்டாள்.

"நீ ஏன் கேட்கிறாய்?"

"நிஜமாகச் சொல்ல மாட்டாயா? எங்கே போகப் போகிறாய்?"

"நான் வெளியே போகிறேன் என்று உனக்கு யார் சொன்னார்கள்?"

திலோத்தமை வெட்கமடைந்தாள். அவளுடைய நிலைமைக்குக் கொஞ்சம் இரங்கினவளாய் விமலா சிரித்துக் கொண்டு, "நான் வெகுதூரம் போகவேண்டும்" என்றாள்.

திலோத்தமையின் முகம் மலர்ந்த தாமரையைப் போலச் சந்தோஷத்தால் விரிந்தது மெல்லிய குரலில், "எங்கே போக வேண்டும்?" என்று கேட்டாள்.

"உன்னால் ஊகிக்க முடியவில்லையா?" என்று விமலா சிரித்துக் கொண்டு கேட்டாள்.

திலோத்தமை அவளுடைய முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

விமலா அவள் கையைப் பிடித்துக் கொண்டு, "சொல்லுகிறேன் வா!" என்று தனியாக அழைத்துக் கொண்டு போய்க் காதோடு காதாய், "நான் சைலேசுவரஸ்வாமி கோவிலுக்குப் போக வேண்டும். அங்கே ஒரு ராஜபுத்திரனைச் சந்திக்க வேண்டும்" என்றாள்.

திலோத்தமையின் சரீரத்தில் மயிர்க்கூச்செறிந்தது. அவள் பதில் ஒன்றும் சொல்லவில்லை.

விமலா மேலே சொல்லலானாள்: "அபிராமஸ்வாமிகளுடன் நான் கலந்து பேசினேன். ஜகத்சிங்கிற்கும் உனக்கும் விவாகம் நடப்பது சாத்தியமில்லையென்பது அவர் கருத்து. உன் தகப்பனார் ஒரு காலும் சம்மதிக்கமாட்டார். இந்த விஷயம் அவர் காதில் விழுந்தால்கூட என்ன ஆகுமோ!"

"ஏன்?" என்று கேட்டுக் கொண்டு திலோத்தமை தலை குனிந்து கொண்டு நின்றாள்; தெளிவில்லாத குரலில், "ஏன்?" என்று மறுபடியும் கேட்டாள்.

"ஏனா? இன்றிரவு ராஜபுத்திரனைக் கோவிலில் சந்திக்கிறேன் என்று அவனுக்கு வாக்களித்துவிட்டு வந்திருக்கிறேன். நீ யாரென்று சொல்வதாகவும் சொல்லியிருக்கிறேன். ஆனால் அதனால் என்ன ஆகப்போகிறது? நான் சொல்லிவிட்டு வந்து விடுகிறேன். அதன் பிறகு செய்ய வேண்டிய யோசனை அவனுடையது. ராஜபுத்திரனுக்கு உன்னிடத்தில் உண்மையான அன்பு இருந்தால்..."

திலோத்தமை அவளை மேலே பேசவிடவில்லை. முகத்தைத் துணியால் மூடிக் கொண்டு "நீ சொல்லுகிறதைக் கேட்க எனக்கு வெட்கமாக இருக்கிறது. உனக்கு எங்கே இஷ்டமோ, அங்கே போ. என் பேச்சை யாரிடமும் எடுக்காதே. யார் பேச்சையும் என்னிடம் சொல்லாதே!" என்றாள்.

விமலா மறுபடியும் சிரித்துக் கொண்டு, "இந்தச் சிறு வயதில் இந்தச் சமுத்திரத்தில் ஏன் குதிக்கிறாய்?" என்றாள்.

"நீ போ! உன் பேச்சு எனக்கு வேண்டாம்".

"அப்படியானால் நான் கோவிலுக்கும் போகவில்லை".

"நீ போகிறதை நான் ஒன்றும் தடுக்கவில்லை. உனக்கு எங்கே போக வேண்டுமென்று இஷ்டமோ அங்கே போ".

"அப்படியானால் நான் போக வேண்டாமா?" என்று சொல்லி விமலா சிரிக்க ஆரம்பித்தாள்.

திலோத்தமை மறுபடியும் தலை குனிந்த வண்ணம் "போ!" என்றாள். விமலா மறுபடியும் சிரித்தாள். "கொஞ்ச நேரம் கழித்து, நான் போகிறேன். நான் வருகிறவரையில் நீ தூங்காமல் இரு; என்ன?" என்றாள்.

திலோத்தமை கொஞ்சம் சிரித்தாள். தூக்கம் எப்படி வரும்? என்ற அர்த்தத்தை உடையதுபோல் இருந்தது அந்த நகை. போகும்பொழுது விமலா ஒரு கையைத் திலோத்தமையின் தோளில் வைத்து மற்றொரு கையால் அவளுடைய மோவாய்க்கட்டையைப் பிடித்துக் கொண்டாள். அப்படியே ஒரு நிமிஷம், அன்பால் பரிசுத்தமடைந்திருந்த அவளுடைய தூயமுகத்தைப் பார்த்துக் கொண்டே நின்றாள். பிறகு ஆர்வத்துடன் அவளை முத்தமிட்டாள். விமலா வெளியே செல்லும் பொழுது அவளுடைய கண்களில் கண்ணீர் துளிர்த்திருந்ததை திலோத்தமை கண்டாள்.

அறை வாசலில் ஆஸ்மானி வந்து விமலாவிடம் "யஜமானர் உன்னைக் கூப்பிடுகிறார்" என்றான்.

திலோத்தமை இதைக் கேட்டதும் அவளருகே வந்து காதோடு காதாக, "உன் வேஷத்தை அகற்றிவிட்டுப் போ!" என்றாள்.

"எனக்கு பயமில்லை" என்றாள் விமலா.

விமலா வீரேந்திரசிங்கின் படுக்கையறைக்குப் போனாள். அவர் சயனம் செய்து கொண்டிருந்தார். ஒரு வேலைக்காரி பாத சேவை செய்து கொண்டிருந்தாள்; மற்றொருத்தி விசிறிக் கொண்டிருந்தாள். கட்டிலுக்கு அருகே போய் விமலா, "என்னைக் கூப்பிட்ட விஷயம் என்ன? உத்தரவாகலாம்" என்றாள். வீரேந்திரன் தலையை நிமிர்த்திப் பார்த்தார்; ஆச்சரியமடைந்தவராய், "நீ வேறு ஏதாவது வேலையாய் எங்கே யாவது போகிறாயோ?" என்று கேட்டார்.

"உங்கள் உத்தரவு என்ன?"

"திலோத்தமை எப்படியிருக்கிறாள்? உடம்பு சரியில்லாமல் இருந்ததே; சௌக்கியமாகி விட்டதா?"

"தேவலை".

"நீ ஒரு நிமிஷம் எனக்கு விசிறு. இவள் போய்த் திலோத்தமையை இங்கே கூட்டிக் கொண்டு வரட்டும்".

விசிறிக் கொண்டிருந்தவள் விசிறியை வைத்துவிட்டுப் போனாள்.

விமலா வாசலில் நின்று கொண்டிருந்த ஆஸ்மானியை வெளியிலேயே இருக்கும்படி ஜாடை செய்தாள் வீரேந்திரன் மற்றொரு வேலைக்காரியைப் பார்த்து, "லட்சுமணி, நீயும் போய் எங்களுக்குக் கொஞ்சம் பானீயம் தயார் செய்து கொண்டு வா! என்றார். அவளும் வெளியே" போனாள்.

"விமலா, இன்று எதற்காக இந்த வேஷம்?" என்றார்.

"எனக்கு அதனால் கொஞ்சம் உபயோகமிருக்கிறது".

"என்ன உபயோகம் என்று எனக்குத் தெரிய வேண்டும்".

"சொல்லுகிறேன் கேளுங்கள்" என்று சொல்லி விமலா மன்மதனின் சரங்கள் போன்ற தன் இரு கண்களையும் திருப்பி அவரைப் பார்த்தபடி, "பிறகு கேளுங்கள், நான் இன்று ஓரிடத்திற்கு அபிஸார வேஷத்தில் போக வேண்டும்".

"யமனைச் சந்திக்க அல்லவே?"

"எதற்காக யமனைச் சந்திக்க? ஏன், மனிதனைச் சந்திக்கப் போகக்கூடாதா?"

"அந்த மனிதன் இன்றுவரை பிறக்கவில்லையே!"

"ஒருவர் உண்டு!" என்றாள் குறிப்பாக.

இவ்வாறு கூறிவிட்டு விமலா வேகமாக வெளியே போய் விட்டாள்.

## பதினோராம் அத்தியாயம்

## ஆஸ்மானியின் தூது

விமலாவின் ஜாடையை அனுசரித்து ஆஸ்மானி வாசலில் காத்துக் கொண்டிருந்தாள்

விமலா வெளியில் வந்து ஆஸ்மானியைப் பார்த்து, "ஆஸ்மானி, உன்னிடம் மிகவும் இரகசியமான ஒரு சங்கதி சொல்ல வேண்டியிருக்கிறது" என்றாள்.

"உன் வேஷத்தைப் பார்த்ததும் நானே நினைத்தேன். இன்று ஏதோ விசேஷமென்று" என்றாள் ஆஸ்மானி.

"நான் இன்று ஒரு காரியமாக வெகுதூரம் போக வேண்டும். இரவில் தனியாகப் போவது கூடாத காரியம். உன்னைத் தவிர நான் வேறு யாரையும் நம்பி, கூடக் கூட்டிக் கொண்டு போக முடியாது. நீ என்னுடன் வரவேண்டும்".

"எங்கே போக வேண்டும்?"

"ஆஸ்மானி, நீ என்றும் இந்த மாதிரி கேள்வி கேட்டதில்லையே!" என்றாள் விமலா.

ஆஸ்மானி கொஞ்சம் கலங்கினவளாய், "அப்படியானால் கொஞ்சம் பொறு. எனக்குக் கொஞ்சம் காரியம் இருக்கிறது; முடித்துக் கொண்டு வந்துவிடுகிறேன்" என்றாள்.

"இன்னொரு விஷயம்; இன்று போகிற இடத்தில், உனக்கு ஏற்கனவே அறிமுகமான ஒரு மனிதரைச் சந்திக்கிறாய் என்று வைத்துக் கொள்வோம்; என்ன செய்வாய்?"

ஆஸ்மானி ஆச்சரியத்துடன், "அவர் யார்?" என்று கேட்டாள்.

"யுவராஜா ஜகத்சிங்கைச் சந்திப்பதாக வைத்துக் கொள்ளேன்".

ஆஸ்மானி வெகுநேரம் மௌனமாக இருந்துவிட்டுப் பிறகு தடுமாறும் குரலில், "இன்று என்ன சம்பவிக்குமோ?" என்று கேட்டாள்.

"சம்பவிப்பதென்ன?"

"ஜகத்சிங் என்னை அடையாளம் கண்டுகொண்டால்?"

"அப்படியானால் நீ வரவேண்டாம். வேறு யாரையாவது அழைத்துக் கொண்டு போகிறேன்; தனியாகப் போவதற்கில்லை".

"எனக்கும் ஜகத்சிங்கைப் பார்க்க வேண்டுமென்று அதிக ஆசையாய்த்தான் இருக்கிறது".

"ஆசையை மனத்திலே வைத்துக் கொள். இப்பொழுது நான் என்ன செய்கிறது என்று தான் எனக்குத் தெரியவில்லை".

விமலா யோசனையில் ஆழ்ந்தாள். திடீரென்று ஆஸ்மானி துணியால் முகத்தை மூடிக் கொண்டு சிரித்தாள்.

"நாசமாய்ப் போக! என்னடி சிரிக்கிறாய்?" என்றாள் விமலா.

"ஒன்றுமில்லை; எனக்குள்ளேயே யோசித்தேன், என் காதலர் திக்கஜரை உன்னுடன் அனுப்பினால் என்ன என்று".

விமலா உல்லாஸமாகச் சிரித்துக் கொண்டு, "அதுவும் வாஸ்தவந்தான். ரஸிக ராஜருடன் கூடப் பயமில்லாமல் போகலாம்".

"நான் வேடிக்கையாகவல்லவா சொன்னேன்!" என்று ஆஸ்மானி ஆச்சரியத்துடன் கூறினாள்.

"தமாஷ் அல்ல; அந்தப் பிராம்மணரிடத்தில் எனக்கு அதிக நம்பிக்கை. அவரைக் கூட்டிக் கொண்டு போகலாம், நம்பிக்கையுடன். அவர் வர இஷ்டப்பட வேண்டுமே!"

"அதற்கு நானாயிற்று. நான் போய் அவரைக் கூட்டிக் கொண்டு வருகிறேன். நீ இங்கே இரு".

இப்படிச் சொல்லிவிட்டு, ஆஸ்மானி சிரித்துக் கொண்டே கோட்டையின் நடுவிலிருந்த ஒரு சிறிய குடிசையை நோக்கி நடந்தாள்.

அபிராமஸ்வாமிகளுடைய சிஷ்யர் கஜபதி வித்தியாதிக்கஜரை இதற்கு முன்பே வாசகருக்கு அறிமுகம் செய்து வைத்திருக்கிறோம். எதற்காக விமலா அவருக்கு ரஸிகராஜன் என்று பெயர் வைத்தாள் என்பது அவருக்குத் தெரியும். அந்த மகான் இந்தக் குடிசையில் வசித்தார். அவர் சுமார் ஐந்தரை அடி உயரம் இருந்தார். குறுக்களவில்

சுமார் ஓர் அடி மூன்று அங்குலமிருந்தார். அவயவங்களுக்குள்ளே மூக்குத்தான் நீளம். அவர் உடம்பில் சதை இருந்ததற்கு அதுதான் அடையாளமாக இருந்தது. நிறமோ நல்ல கறுப்பு.

கஜபதி வித்தியா திக்கஜர் நல்ல தீக்ஷணமான புத்தியுள்ளவர். பாலியத்தில் நாலு சகபாடிகளுடன் வியாகரணம் படிக்க ஆரம்பித்தார்; ஏழெட்டு மாதத்தில் 'ஸஹர்ணோர்க்க' என்ற சூத்திரம் பாடமாயிற்று. பட்டாச்சாரியார் அனுக்கிரகத்தில் பத்துப்பேர் சகபாடிகளுடன் பதினைந்து வருஷம் படித்து வியாகரணத்தில் சப்த காண்டத்தை முடித்துவிட்டார்! மேலே பாக்கியிருக்கும் காண்டங்களை ஆரம்பிக்குமுன் குரு நாம் சொல்லிக் கொடுத்ததன் பலன் என்னவென்று பார்ப்போம் என்று யோசித்து, "சிஷ்யர்களே! ராம் சப்தத்திற்குப் பின்னால் அம் சேர்த்தால் என்ன ஆகும்?" என்று கேட்டார். அநேக சிஷ்யர்கள் மிகவும் யோசித்துச் சொன்ன பதிலாவது: "ராமாம்". உபாத்தியாயர், பையன்களே, "உங்கள் படிப்பு முடிந்துவிட்டது. நீங்கள் இந்த க்ஷணமே வீடு போய்ச் சேருங்கள். உங்களுக்குப் பாடம் ஸாங்கமாக வந்துவிட்டது. உங்களுக்குக் கற்றுக்கொடுக்க இனிமேல் என்னிடத்திலே படிப்புக் கிடையாது" என்றார்.

கஜபதி மிகவும் அகங்காரங் கொண்டவராய், "ஒரு வேண்டுகோள்: ஆமாம், எனக்கென்ன பட்டம் அளிக்கிறீர்கள்?" என்றார்.

"அப்பா, நீ படித்திருக்கிற படிப்பிற்குக் கட்டாயம் ஒரு புது பட்டம் அவசியந்தான். வித்தியாதிக்கஜம் என்ற பட்டத்தை வைத்துக் கொள்!" என்றார் உபாத்தியாயர்.

திக்கஜர் ஆனந்தமடைந்து குருவின் பாதத்தில் விழுந்து வணங்கிவிட்டு வெளியேறினார்.

திக்கஜ பண்டிதர் வீட்டிற்குத் திரும்பியதும் யோசிக்கலானார்: 'வியாகரணம் முதலியவைகளைக் கற்றுணர்ந்து விட்டேன். இப்பொழுது கொஞ்சம் ஸ்மிருதி பாடம் கற்றுக் கொண்டால் நல்லது. அபிராமஸ்வாமிகள் பெரிய பண்டிதர் என்று கேள்விப்படுகிறேன். எனக்குப் பாடம் சொல்ல அவரைத் தவிர வேறு யாருக்கும் யோக்கியதை இல்லை. ஆகையால் அவரிடம் போய்க் கொஞ்சம் ஸ்மிருதி சிக்ஷை பெற வேண்டும்.

இவ்விதம் தீர்மானம் செய்து கொண்டு திக்கஜர் மாந்தாரணக் கோட்டைக்கு வந்து சேர்ந்தார். அபிராமஸ்வாமிகள் அநேகருக்குப் பாடம் சொல்லி வந்தார்; அவர்களிடம் அவருக்கு ஒருவிதமான விருப்பு வெறுப்பே இல்லை. திக்கஜர் ஏதாவது கற்றுக் கொண்டாரோ இல்லையோ அவருக்குத் தெரியாது; பாடம் மட்டும் சொல்லி வந்தார்.

கஜபதிப் பெரியார் வெறும் வியாகரண ஸ்மிருதி சாஸ்திர பண்டிதர் மட்டுமல்ல. காவியம், அலங்காரம் எல்லாம் அவருக்கு வரும். நல்ல ரஸிகர். அவருடைய ரஸிகத்தன்மைக்கு முக்கியமான பரிசோதனை இடம் நெய்ப் பாத்திரம். ஆனால் அந்த ரஸிகத்தன்மை, அவர் ஆஸ்மானியுடன் பழகும் முறையில் நன்றாகக் காணப்பட்டது. அதில் ஓர் ஆழ்ந்த பொருள்கூட இருந்தது. அவர், என்னைப் போன்றவர்கள் இந்தத் தேசத்தில் லீலைகள் செய்து காட்டுவதற்குத்தான் பிறக்கிறார்கள் என்று எண்ணினார். தாம் கிருஷ்ணனென்பதும் ஆஸ்மானி ராதையென்பதும் அவர் நினைப்பு.

ஆஸ்மானியும் ஒரு ரஸிகை. அவள் இந்த வியவகாரத்தில் பூரணமாக ஈடுபட்டாள்.

## பன்னிரண்டாம் அத்தியாயம்

## காதலர்கள்

ஆஸ்மானியின் ரூபலாவண்யத்தைப் பற்றி அறிய வாசகருக்கு ஆவல் ஏற்பட்டிருக்கிறதல்லவா? அந்த வர்ணனையைச் செய்ய நான் வாக்தேவியின் அருள்பெற வேண்டும். அவளுடைய கூந்தலைச் சர்ப்பம் என்று வர்ணிக்கலாம்; அதைக் கண்டு பாம்பு வெட்கிப் புற்றில் போய் நுழைந்து கொண்டு விட்டது. அவள் கண்களைக் காட்டிலிருக்கும் பக்ஷிகள் என்று வர்ணிக்கலாம்; அவள் மூக்கைக் கருடனுடைய மூக்கு என்று வர்ணிக்கலாம். காரணம் கொண்டுதான் மாதுளை மரமே வங்காளத்திலிருந்து மறைந்துவிட்டது; யானைகூடப் பிரம்ம தேசத்திற்கு ஓடிவிட்டது.

தலையெழுத்துப்படி ஆஸ்மானி ஒரு விதவை! ஆஸ்மானி, திக்கஜரின் குடிசைக்கு வந்து பார்த்தபொழுது வாசற் கதவு தாளிடப்பட்டிருந்தது. உள்ளே விளக்கு எரிந்து கொண்டிருந்தது.

"பண்டிதரே!" என்று கூப்பிட்டாள்.

ஒரு பதிலும் வரவில்லை.

"ஓ! கோஸாயி!"

அப்பொழுதும் பதிலில்லை.

"உள்ளே என்ன செய்கிறீர்கள்? ஓ! ரஸிகராஜ ரஸோபாத்தியாயப் பிரபு!"

பதிலில்லை.

ஆஸ்மானி கதவின் சந்து வழியாக உள்ளே பார்த்தாள். பிராம்மணர் சாப்பிட்டுக் கொண்டிருந்தார். அதனால்தான் அவர் பேசவில்லை. பேசினால் சாப்பிடக்கூடாது. இன்று இவர் நிஷ்டையைப் பார்ப்போம்; பேசிவிட்டுச் சாப்பிடுகிறாரா இல்லையா என்று பார்த்து விடுகிறேன் என்று தீர்மானித்துக் கொண்டாள்.

"பதில் சொல்லுங்கள், ரஸிக ராஜாவே!" என்றாள்.

பதிலில்லை.

"ரஸ ராஜா!"

"ஹூம்!" என்று பதில் வந்தது.

பிராம்மணர் சோற்றை வாயில் வைத்துக் கொண்டிருந்ததால் பேச முடியவில்லையென்று எண்ணி ஆஸ்மானி மறுபடியும், "பண்டிதரே!" என்றாள்.

"ஹூம்!"

"சாதத்தை விழுங்கிவிட்டுப் பேசுங்களேன்!"

"ஹூ...உ....உம்!"

"பிராம்மணராயிருந்து இந்தக் காரியமா செய்கிறீர்? இன்றைக்கு ஸ்வாமிஜியிடம் சொல்லுகிறேன்; உள்ளே யார் இருக்கிறார்கள்? சொல்லும்!"

பிராம்மணருக்குத் தூக்கி வாரிப்போட்டு விட்டது. வெறும் வீட்டைச் சுற்றிமுற்றிப் பார்த்தார். யாருமில்லையென்று கண்டு மறுபடியும் சாப்பிட ஆரம்பித்தார்.

"மறைந்திருக்கிற ஆசாமியை நான் கண்டுபிடித்து விடுகிறேன்".

திக்கஜர் முகம் வெளுத்தது. மறுபடியும் இங்குமங்கும் பார்த்துக் கொண்டு, "யார் இருக்கிறார்கள்? இங்கே யாரும் இல்லையே!" என்றார்.

"ஓ, மறுபடியும் சாப்பிடுகிறீர்களா? பேசிவிட்டு, மறுபடியும் சாப்பிடுங்கள்!"

"யார்... எப்பொழுது பேசினேன்?"

"நீங்கள்தான் இப்பொழுதுதான்!" என்று ஆஸ்மானி சிரித்துக் கொண்டே சொன்னாள்.

"ஆமாம், ஆமாம்! இனிமேல் சாப்பிடக்கூடாது!"

"சரி, எழுந்திருந்து வந்து கதவைத் திறவுங்கள்!"

பிராமணர் சாப்பாட்டை விட்டுவிட்டு எழுந்து கதவைத் திறக்க வருவதைக் கண்டாள் ஆஸ்மானி

"வேண்டாம், வேண்டாம்! சாப்பிட்டுவிட்டு வாருங்கள்; அவசரமென்ன?" என்றாள்.

"இல்லை, இல்லை; இனிமேல் சாப்பிடமாட்டேன். விஷயத்தைச் சொல்லு!"

"வயிறு நிரம்பவில்லையென்றால் மறுபடியும் என் முன் சாப்பிடுங்கள்!"

"கிருஷ்ண, கிருஷ்ண! பேசிவிட்டுப் பிறகு எப்படி சாப்பிடுவது?"

"சரி, அப்படியானால் நான் போகிறேன். உங்களிடம் அநேகம் சங்கதிகள் சொல்ல வேண்டுமென்று வந்தேன். ஒன்றும் சொல்ல முடியாது. நான் போகிறேன்".

"இல்லை, இல்லை; கோபித்துக் கொள்ளாதே. சாப்பிடுகிறேன்".

பிராமணர் மறுபடியும் சாப்பிட ஆரம்பித்தார். இரண்டு மூன்று வாய் சாப்பிட்டாரோ இல்லையோ, ஆஸ்மானி, "எழுந்திருந்து வந்து கதவைத் திறவுங்கள்" என்றாள்.

"இதோ முடித்துவிட்டு வந்துவிடுகிறேன்!"

"கதவைத் திறந்துவிட்டுச் சாப்பிடலாம்; நான் பேசிக்கொண்டே இருக்கிறேன்".

"ஐயோ! இதோ எழுந்துவிட்டேன்".

பிராம்மணர் மனமின்றி எழுந்துபோய்க் கதவைத் திறந்தார்.

## பதின்மூன்றாம் அத்தியாயம்

## ஆஸ்மானியின் அன்பு

வாசற்கதவு திறக்கப்பட்டதும் ஆஸ்மானி உள்ளே நுழைந்தாள். காதலி வந்திருக்கிறாள் என்றதை உணர்ந்ததும் திக்கஜருடைய மனத்தில் அவளை அழகாக வரவேற்கவேண்டுமென்று தோன்றிற்று எனவே, கையைத் தூக்கி, "ஆயாஹி வரதேதேவி!" (வா, வரம் கொடுக்கும் தேவி!) என்றார்.

"இப்பேர்ப்பட்ட அழகான கவிதையை எங்கே சம்பாதித்தீர்கள்?"

"உனக்காக இப்பொழுதுதான் கற்பனை செய்தேன்!"

"சரியாகத்தான் உங்களுக்கு ரஸிகராஜர் என்று பெயர் வைத்திருக்கிறார்கள்".

"சுந்தரி, நீ உட்கார். நான் போய்க் கையலம்பிக்கொண்டு வருகிறேன்".

ஆஸ்மானி, கையையா அலம்பிக் கொள்ளப் போகிறீர்கள்? உங்களை மறுபடியும் சாப்பிட வைக்கிறேன் என்று மனதில் எண்ணிக் கொண்டு, "எதற்காக? கையை எதற்காக அலம்பிக் கொள்ள வேண்டும்? எதிரே இலையில் பாக்கியிருக்கும் அன்னத்தை யார் சாப்பிடுகிறது?" என்றாள்.

"என்ன செய்கிறது? சாப்பிட்டு எழுந்தாகிவிட்டது. மறுபடியும் அன்னத்தைச் சாப்பிடுவது எப்படி?"

"என்ன பேச்சென்று பேசுகிறீர்கள்? சாப்பிடாவிட்டால் பசி எடாதோ? பட்டினியா கிடக்கிறது? நன்றாயிருக்கிறது!"

திக்கஜர் கொஞ்சம் மனவருத்தத்துடன், "என்ன செய்கிறது? நீதான் தடபுடல் படுத்திவிட்டாயே!" என்று சொல்லிக் கொண்டு ஆவலுடன் இலையைப் பார்த்தார்.

"அப்படியானால் நீங்கள் மறுபடியும் சாப்பிட்டுத்தான் ஆகவேண்டும்".

"கிருஷ்ண, கிருஷ்ண! உத்தராபோசனம் வாங்கிக் கொண்டு இலையை விட்டு எழுந்தபிறகு சாப்பிடுவதா?"

"ஏன் கூடாது? நான் சாப்பிட்ட எச்சிலையும் சாப்பிட வேண்டும்" என்று சொல்லிக் கொண்டு ஆஸ்மானி இலையிலிருந்து இரண்டு மூன்று கவளங்கள் எடுத்துச் சாப்பிட்டாள்.

பிராம்மணர் என்ன செய்வார் பாவம்! பேச்சற்றுப் போய் சும்மா இருந்தார்.

ஆஸ்மானி இலையருகே இருந்த வண்ணம், "சாப்பிடுங்களேன்!" என்றாள்.

பிராம்மணருக்கு வாய் பேச வரவில்லை.

"சாப்பிடுங்கள். இல்லாவிட்டால் நான் ஒன்றுமே சொல்ல மாட்டேன்! நீங்கள் நான் சாப்பிட்ட பாக்கியைச் சாப்பிட வேண்டும். சாப்பிடுவதால் என்ன தோஷம்?"

"அதனால் நல்லதென்ன ஏற்படப் போகிறது? பிரியே!"

திக்கஜருடைய வயிற்றில் அக்கினி தேவன் கொழுந்துவிட்டு எரிய ஆரம்பித்தான். திக்கஜர் மனத்திற்குள், 'ஆஸ்மானி அதிக அழகாக இருக்கிறாள். என்மேல் அபாரப் பிரீதி கொண்டிருக்கிறாள். அவளுடன் போஜனம் செய்தால்தான் என்ன? ரகசியமாக இந்த எச்சிலைச் சாப்பிட்டு விடுகிறேன். பசி தீரட்டும்' என்று எண்ணிக் கொண்டு இருந்தார்.

அருடைய மனத்தை உடனே ஜாடையினால் அறிந்து கொண்ட ஆஸ்மானி, "சாப்பிட்டால் சாப்பிடுங்கள்; இல்லாவிட்டால் போங்கள். ஒருதடவை இலையடியில் உட்காருங்கள் போதும்!" என்றாள்.

"இதென்ன இந்தக் காயிதா?"

"என் மனோபீஷ்டத்தை ஒருதடவை நிறைவேற்றக்கூடாதா?"

"இலையடியில் உட்கார்ந்தால் என்ன வந்துவிடுகிறது? அதனால் ஒன்றும் தோஷமில்லை. உன் இஷ்டப்படியே செய்கிறேன்" என்று சொல்லிக் கொண்டு திக்கஜ பண்டிதர் இலையருகில் உட்கார்ந்தார். வயிற்றில் பசி; முன்னே இலையில் அன்னம்! ஆனால் சாப்பிட முடியவில்லை. திக்கஜரின் கண்ணில் ஜலம் ததும்பிற்று.

"சூத்திரரின் எச்சிலைப் பிராம்மணர் சாப்பிட்டால் என்ன ஆகும்?" என்று கேட்டாள் ஆஸ்மானி.

"ஸ்நானம் செய்ய வேண்டும்?"

"உங்களுக்கு என்மேல் இருக்கும் காதலை இன்று கண்டுபிடித்து விடப் போகிறேன். நான் இவ்வளவு சொன்ன பிறகு, இப்பொழுது ஸ்நானம் செய்யப் போகிறீர்களா பார்ப்போம்".

"நான் இப்பொழுது ஸ்நானம் செய்ய முடியுமா சொல்!" என்று பண்டிதர் அசட்டுச் சிரிப்புச் சிரித்தார்.

"உங்கள் பிரசாதத்தைச் சாப்பிட வேண்டுமென்று எனக்கு ஆசை. உங்கள் கையாலேயே என் வாயில் இரண்டு கவளங்கள் போடுங்கள்".

"அதில் என்ன தோஷம்? அதற்காக ஸ்நானம் செய்ய வேண்டிய அவசியமும் இல்லை" என்று சொல்லிக் கொண்டு அவர் பாக்கியிருந்த அன்னத்தைச் சேர்த்துப் பிசைய ஆரம்பித்தார்.

"ஒரு சின்னக் கதை சொல்லுகிறேன். கேளுங்கள். நான் கதை சொல்லுகிற வரையில் நீங்கள் சாதத்தைப் பிசைந்து கொண்டிருக்க வேண்டும்".

"சரி!"

ஆஸ்மானி, "ஒரே ஒரு ராஜா, அவனுக்கு இரண்டு ராணிகள்" என்று கதையை ஆரம்பித்தாள். திக்கஜர், "உம்" கொட்டிக் கொண்டு, அவள் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தார்; சாதத்தையும் பிசைந்துக் கொண்டே இருந்தார்.

கேட்டுக் கொண்டே போகும்போது திக்கஜருடைய மனம் ஆஸ்மானியின் கதையில் சென்றுவிட்டது. கை இலையில் இருந்தது. பசி தன் பாட்டுக்கு உள்ளே ராவிக் கொண்டே இருந்தது. ஆஸ்மானியின் கதை மிகவும் ஸ்வாரஸ்யமாக இருந்தபொழுது, திக்கஜர் அதில் தம்மையே மறந்தார். அப்பொழுது, அவருடைய கை ஒரு நம்பிக்கைத் துரோகமான காரியம் செய்து விட்டது. இலையிலிருந்த கை, பிசைந்திருந்த சோற்றை எடுத்து, அவருடைய வாயில் போட்டுவிட்டது! வாய் அதை அப்படியே வாங்கிக் கொண்டது. அதைப் பற்கள் மெல்ல ஆரம்பித்தன; நாக்குத் தொண்டையில் தள்ளிற்று. திக்கஜருக்கு ஒன்றுமே தெரியாது. அதைப் பார்த்து ஆஸ்மானி விழுந்து விழுந்து சிரித்தாள்.

திக்கஜருக்கு அப்பொழுதுதான் பிரக்ஞை வந்தது. தடபுடலாகக் கையிலிருந்த கவளத்தை வாயில் போட்டுக் கொண்டு நடுங்கும் மற்றொரு கையை ஆஸ்மானியின் மேல் வைத்து ஆஸ்மானி, "என்னைக் காப்பாற்று; யாரிடமும் சொல்லிவிடாதே!" என்று அலறினார்.

## பதினான்காம் அத்தியாயம்

## திக்கஜர் வெளியேற்றம்

அந்தச் சமயத்தில் விமலா அங்கே சென்று வாசற்கதவை இடித்தாள். விமலா கதவின் ஒரு பக்கத்தில் நின்று கொண்டு எல்லாவற்றையும் கவனித்துக் கொண்டிருந்தாள். கதவிடிக்கும் சத்தத்தைக் கேட்டதும் திக்கஜர் முகம் சுண்டிப் போய்விட்டது.

"ஐயையோ! குடிகெட்டுப்போச்சே! விமலா வந்து விட்டாளே! ஒளிந்து கொள்ளுங்கள் சட்டென்று!" என்றாள் ஆஸ்மானி.

"எங்கே ஒளிந்து கொள்வது? சட்டென்று சொல்லு! என்று திக்கஜ பண்டிதர் கெஞ்சினார்".

"அதோ அந்த இருட்டு மூலையில் ஒரு மண் பானை இருக்கிறது. அதை எடுத்துத் தலையில் கவிழ்த்துக் கொண்டு அந்த மூலையிலேயே இருங்கள்; ஒருவரும் பார்க்க முடியாது".

திக்கஜர் அந்தப்படியே செய்யச் சென்றார்; ஆஸ்மானியினுடைய புத்தி சாதுரியத்தைக் கண்டு ஆச்சரியமடைந்தார். ஆனால் துர்ப்பாக்கியவசமாக, அந்தப் பிராமணர் ஒரு ஊறுகாய்ப் பானையை எடுத்துத் தலையில் கவிழ்த்துக் கொண்டு விட்டார். பானையிலிருந்த ஊறுகாயும் ஜலமும் தலை உடம்பெல்லாம் விழுந்து வழிந்தது. ஜலப்பிரவாகத்தின் நடுவே இருக்கும் பாறை போல, அவருடைய மூக்கு அந்த ஊறுகாய் ஜலத்தின் நடுவில் பிரகாசித்தது. அந்தச் சமயம் விமலா உள்ளே நுழைந்தாள்; திக்கஜரின் அழகைப் பார்த்தாள். திக்கஜர் அவளைக் கண்டு நடுநடுங்கினார். அவரைப் பார்த்ததும் விமலாவிற்கு இரக்கம் வந்துவிட்டது.

"பயப்படாதேயுங்கள். நீங்கள் மிச்சமிருக்கும் இந்தச் சாதத்தையும் சாப்பிடுங்கள். யாரிடமும் சொல்லவில்லை" என்றாள் விமலா.

அப்பொழுது பிராம்மணர் முகம் மலர்ந்தது. மறுபடியும் சாப்பிட ஆரம்பித்தார். மேலேயிருந்த ஊறுகாய் வகையராக்களைக்கூடக் கவனிக்கவில்லை. ஆஸ்மானி பிசைந்த சாதத்தைச் சாப்பிட்டார். அநியாயமாக ஊறுகாய் வீணாய்ப் போய்விட்டதே என்று பரிதாபப்பட்டார். சாப்பாடு முடிந்ததும் ஆஸ்மானி அவருக்கு ஸ்நானம் செய்வித்தாள். திக்கஜர் கொஞ்சம் நிம்மதியடைந்ததும், "ரஸிக சிரேஷ்டரே! ஒரு பெரிய விஷயம் இருக்கிறது" என்றாள் விமலா.

"அதென்ன?" என்று பிராம்மணர் கேட்டார்.

"உங்களுக்கு எங்கள் இருவர் மேலும் பிரியந்தானா?"

"பிரியந்தான்"

"இரண்டு பேர் பேரிலுமா?"

"இரண்டு பேர் மேலும்தான்"

"அது எப்படி முடியும்?"

"ஏன் முடியாது?"

"இங்கேயேயா?"

"இங்கேயே!"

"இந்த இடத்திலேயா!"

"இந்த இடத்தில்!"

"நாங்கள் இருவரும் இங்கே வருவது யாருக்காவது தெரிந்தால்?" என்றாள் விமலா.

"நாங்கள் உம்முடன் ஓடிப்போக வேண்டும் எங்காவது" என்றாள் ஆஸ்மானி.

திக்கஜர் பேச்சற்றுப் போனார்; தலையை அசைத்தார். விமலா சிரிப்பைச் சிரமத்துடன் அடக்கிக் கொண்டு, "இப்பொழுது என்ன செய்கிறது?" என்றாள்.

"ஆனால்... ஆனால்" என்று திக்கஜர் இழுத்தார் மேலே சொல்ல முடியவில்லை.

"ஆனால் என்ன?" என்று ஆஸ்மானி கேட்டாள்.

"ஆனால்... ஸ்வாமிகளிடம் சொல்ல வேண்டுமே!"

"ஸ்வாமிகளிடம் என்ன சொல்லுகிறது? உங்கள் தாயார் சிராத்தம் வருகிறது. ஸ்வாமிகளிடம் சொல்ல வேண்டுமா?" என்றாள் விமலா.

"வேண்டியதில்லை, வேண்டியதில்லை. எப்பொழுது புறப்பட வேண்டும்?"

"எப்பொழுதா, இப்பொழுதேதான்!"

"இப்பொழுதேயா?"

"இப்பொழுதில்லாமல் என்ன? வேண்டாமென்றால் சொல்லுங்கள். நாங்கள் வேறு யாருடனாவது தமாஷாகப் போகிறோம்" என்றாள் விமலா.

திக்கஜர் பார்த்தார். அவரால் அதற்குமேல் இருக்க முடியவில்லை; "புறப்படுங்கள், நான் தயார்!" என்றார்.

திக்கஜர் நாமாவளி சொன்னார். விமலா முன்னும், திக்கஜர் பின்னுமாகப் பிரயாணமானார்கள்.

திக்கஜர் திடீரென்று "சுந்தரி!" என்றார்.

"என்ன?" என்றாள் விமலா.

"எப்பொழுது திரும்புகிறது?"

"திரும்பி எதற்காக வரவேண்டும்? ஒரே அடியாய்ப் போய்விடுமோவே!"

திக்கஜர் முகம் மலர்ந்தது. சிரித்துக் கொண்டு, "என் சாமான்கள் இருக்கின்றனவே?" என்றார்.

"அதெல்லாம் எதற்கு?"

பிராம்மணர் கொஞ்சம் முகவாட்டம் அடைந்தார். என்ன செய்கிறது? பெண்கள் மனம் வைத்தால்தானே என்று எண்ணிக் கொண்டு "என் பெட்டி?" என்றார்.

"சீக்கிரம் கொண்டு வாருங்கள்".

திக்கஜருடைய சாமான் எல்லாம் இரண்டு பெட்டிதான்; வியாகரணம், ஸ்மிருதி, சுவடிகள், வியாகரணச் சுவடியைக் கையிலெடுத்துக் கொண்டு வந்து, "இதனால் ஒரு காரியமும் ஆக வேண்டியதில்லை; ஏனென்றால் இது முழுவதும் என் மனத்தில் இருக்கிறது" என்று சொல்லிக் கொண்டு ஸ்மிருதியை மட்டும் பெட்டியில் வைத்தார்; துர்க்கா ஸ்ரீ ஹரி! என்று சொல்லிவிட்டு விமலாவுடனும், ஆஸ்மானியுடனும் புறப்பட்டார்.

"நீங்கள் முதலில் போங்கள்; நான் பின்னால் வருகிறேன்" என்றாள் ஆஸ்மானி.

இப்படிச் சொல்லிவிட்டு ஆஸ்மானி மெள்ள வீட்டிற்குள் நழுவி விட்டாள். இருட்டில் இருவரும் பதுங்கிப் பதுங்கி யாரும் பாராமல் கோட்டை வாயிலுக்கு வெளியே வந்தார்கள். கொஞ்சம் தூரம் சென்றதும் திக்கஜர், "என்ன ஆஸ்மானி நம்மோடு வரவில்லையா?" என்றார்.

"அவள் வரமுடியாதென்று தெரியாதா? அவள் எதற்கு?"

ரஸிக ராஜர் மௌனமாக இருந்துவிட்டார். ஒரு நிமிஷம் கழித்துப் பெருமூச்சு விட்டுக் கொண்டு, "சாமான்கள்!" என்று முனகினார்.

## பதினைந்தாம் அத்தியாயம்

## திக்கஜரின் தைரியம்

விமலா வேகமாக நடந்து கொஞ்ச நேரத்திற்குள் மாந்தாரணத்தை விட்டு வெகுதூரம் வந்துவிட்டாள் இரவின் இருட்டு மிகவும் அதிகமாக இருந்தது. நட்சத்திரங்களின் உதவியைக் கொண்டு அவர்கள் நிதானமாகப் போனார்கள். காட்டுப் பாதைக்கு வந்ததும் விமலா கொஞ்சம் கவலை கொள்ள ஆரம்பித்தாள். துணை வந்த பேர் வழி பேச்சுமூச்சின்றிப் பின்னாலேயே வந்து கொண்டிருந்தார். ஆழ்ந்த அந்த நிசப்தத்தில் மனிதனின் குரலைக் கேட்டால் தைரியம் வரும் போல் இருந்ததால், விமலா திக்கஜரைப் பார்த்து, "ரஸிக சிகாமணியே! என்ன யோசிக்கிறீர்கள்?" என்றாள்.

"சாமான்கள்!"

விமலா பதில் சொல்லாமல் முகத்தை மூடிக் கொண்டு சிரித்தாள்.

ஒரு நிமிஷநேரம் கழித்து விமலா மறுபடியும் "திக்கஜரே, உங்களுக்குப் பிசாசு பயம் உண்டோ?" என்றாள்.

"ராம, ராம, ராம, ராமன் துணை!" என்று சொல்லிக் கொண்டு திக்கஜர் விமலாவிற்குப் பின்னால் இரண்டடி சென்றார்.

"இந்தப் பாதையில், சனியன், பிசாசுகளின் அக்கிரமம் ரொம்ப ஜாஸ்தி" என்றாள் விமலா. திக்கஜர் விமலாவிடம் நெருங்கி அவளுடைய புடவையின் முந்தானையைப் பிடித்துக் கொண்டார்.

"அன்று நான் சைலேசுவரர் கோவிலுக்கு வந்தேனோ இல்லையோ? வழியில் ஆலமரத்தில், ஏதோ ஒரு விகாரமான உருவத்தைக் கண்டேன்!"

புடவை பட்ட பாட்டிலிருந்து திக்கஜர் தலையிலிருந்து கால்வரை நடுங்கிக் கொண்டிருந்தார் என்று தெரிந்தது விமலாவிற்கு. அதற்குமேல் ஏதாவது சொன்னால் பிராம்மணர் நடக்கக்கூடமாட்டார் என்று அறிந்தாள். ஆகையால், விமலா கொஞ்சம் அமைதியான குரலில், "ரஸிக ராஜரே, உங்களுக்குப் பாடத் தெரியுமோ இல்லையோ?" என்று கேட்டாள்.

"ரஸிகபுருஷர்கள், எந்த இடத்திலாவது, சங்கீதம் அறியாதவர்களாக இருப்பார்களா?"

"ஏதோ தெரியும்" என்றார் திக்கஜர்.

"ஒரு பாட்டுப் பாடுங்கள் பார்ப்போம்".

திக்கஜர் ஆரம்பித்தார்.

"ஏ,.... ஹும்... உ, ஹும்..."

"ஸயீ கி க்ஷணே தேகிலாம் சியாமே கதம்பேரி டாலே"

பாதையில் படுத்திருந்த பசு ஒன்று அவருடைய குரலில் விபரீதமான சத்தத்தைக் கேட்டதும் எழுந்து ஓடிற்று

திக்கஜர் பாடினார்:-

"ஸேயீதின புடில் கபால் மோர்-"

"காலி திலாம் கூலே."

"மாதாய் சூடா, ஹாதே வாம்சி, கதா கய் ஹாஸி ஹாஸி"

"பலே ஓ கோயாலா மாஸீ - கலஸீதிப் பேலே".

அதற்குமேல் திக்கஜரின் பாட்டு ஓடவில்லை. அவருடைய செவி வேறொர் இடத்தில் பலாத்காரமாக இழுக்கப்பட்டது. அமிருத மயமாய், மனத்தை வெறிக் கொள்ளச் செய்யும் இனிமையான சங்கீதத்துவனியொன்று, அப்ஸர ஸ்திரீயின் கையிலிருக்கும் வீணையொலிபோலக் காதில் வந்து விழுந்தது. விமலா தன் இயற்கையான சாரீரக் குளுமையுடன் பாட ஆரம்பித்தாள்.

சத்தமற்றிருந்த அந்தக் காட்டு வழியில், ஏழு ஸ்வரங்களிலும் பரிபூரணமாகச் சஞ்சரித்த அந்த சாரீரத்தின் துவனி இரவின் ஆகாயத்தில் வியாபித்துக் கிளம்பிற்று; கோடைக் காலத்தின் குளிர்ந்த காற்றில் மிதந்து சென்றது.

திக்கஜர் மூச்சுவிடாமல் அதைக் கேட்டுக் கொண்டிருந்தார். விமலா பாடி முடிந்ததும் திக்கஜர், "இன்னுமொரு தரம்!" என்றார்.

"இன்னுமொரு தரம் என்ன?"

"மறுபடியும் ஒரு பாட்டுப் பாடு".

"என்ன பாட வேண்டும்?"

"ஏதாவது பங்களா ராகத்தில் பாடு".

"பாடுகிறேன்" என்று சொல்லி விமலா மறுபடியும் பாட ஆரம்பித்தாள்.

பாடிக் கொண்டே இருக்கும்பொழுது திக்கஜர் தன் புடவையின் தலைப்பைப் பிடித்து இழுப்பதை உணர்ந்தாள்; திரும்பிப் பார்த்தாள்; திக்கஜர் வெலவெலத்துப் போனவராய்த் தன் பின்னால் தலைப்பைப் பிடித்துக் கொண்டு நின்றதைக் கண்டாள்.

விமலா ஆச்சரியமடைந்தவளாய், "என்ன ஆகிவிட்டது? பிசாசு இல்லையே!" என்று கேட்டாள்.

பிராம்மணருக்கு பேச முடியவில்லை. கையை மட்டும் சுட்டிக்காட்டி, "அதோ!" என்றார்.

விமலா அதே இடத்தில் நின்று கொண்டு, அவர் காட்டிய இடத்தை உற்று நோக்கினாள். அழுத்தமாக, ஆழ்ந்து எழுந்த, ஒரு மூச்சின் சத்தம் அவள் காதில் விழுந்தது. ஏதோ ஒரு பதார்த்தம் இந்த இடத்தில் இருப்பதாகத் தென்பட்டது.

மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு விமலா அருகில் நெருங்கிப் போய் பார்த்தாள். ஒரு ஜேணம் பூட்டிய குதிரை, சாகும் தறுவாயில், மூச்சுவிட முடியாமல் திணறிக் கொண்டிருந்தது.

விமலா மறுபடியும் மேலே நடக்கலானாள். சவாரியுடன் கூடிய சைனியக் குதிரை ஒன்று பாதையில் செத்துக் கொண்டிருந்ததைக் கண்டு அவள் தீர்க்காலோசனையில் ஆழ்ந்தாள். வெகுநேரம் பேசவே இல்லை. நான்கு மைல் சென்றபிறகு, திக்கஜர் மறுபடியும் விமலாவின் புடவையைப் பற்றி இழுத்தார்.

"என்ன?" என்று கேட்டாள் விமலா. திக்கஜர் ஏதோ ஒன்றைக் கையில் எடுத்துக் கொண்டு வந்து காட்டினார். அதைப் பார்த்துவிட்டு விமலா, "இது ஒரு சிப்பாயின் தலைப்பாகை!" என்றாள். விமலா மறுபடியும் யோசனையில் ஆழ்ந்தாள். தனக்குத்தானே, "குதிரையின் யஜமானனுடைய தலைப்பாகையா இது? இல்லை. இது ஒரு காவலாளியின் தலைப்பாகை" என்று சொல்லிக் கொண்டாள்.

கொஞ்ச நேரத்திற்கெல்லாம் சந்திரோதயம் ஆயிற்று. விமலா எந்த விஷயத்தைப் பற்றியோ யோசிப்பதில் ஈடுபட்டுவிட்டாள். வெகுநேரம் கழித்து மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு திக்கஜர் "சுந்தரி! என்ன வெகுநேரமாய் ஒன்றும் பேசவே இல்லையே?" என்றார்.

"வழியில் ஏதாவது அடையாளம் தெரிகிறதா?" என்று விமலா கேட்டாள்.

கஜபதி வெகுசிரமப்பட்டுப் பாதையை உற்றுக் கவனித்த பிறகு, "அநேக குதிரைகள் போன காலடிச் சின்னங்கள் இருக்கின்றன" என்றார்.

"சபாஷ், நீங்கள் புத்திசாலித்தான்! அதிலிருந்து என்ன தெரிகிறது?"

"ஒன்றும் தெரியவில்லை".

"சாகும் குதிரையின் அருகில் ஒரு சிப்பாயின் தலைப்பாகை, குதிரையின் காலடிச் சின்னங்கள் - இவைகளிலிருந்து ஒன்றும் விளங்கவில்லையா?"

"இல்லையே!"

"இப்பொழுதுதான் இதே வழியாக ஒரு பெரிய சேனை போயிருக்கிறது".

திக்கஜர் பீதி அடைந்தவராய், "அப்படியானால் இப்பொழுது எதிரே வருவார்கள்" என்றார்.

விமலா சிரித்துக் கொண்டு, "முட்டாள் பிராம்மணா, அவர்கள் எதிரே எப்படி வர முடியும்? குதிரைகளின் குளம்பு அடையாளம் எந்தப் பக்கம் இருக்கிறதென்று தெரியவில்லையா? இந்தச் சேனை மாந்தாரணக் கோட்டைக்குப் போயிருக்க வேண்டும்" என்று சொல்லி விட்டு மறுபடியும் யோசனை செய்தாள்.

கொஞ்சநேரத்திற்கெல்லாம் சைலேசுவரரின் வெண்மையான கோவில் கண்ணில் தென்பட்டது ராஜபுத்திரனோடு பேசும்போது பிராம்மணர் கூட இருப்பது சரியல்லவென்று விமலா எண்ணினாள். ஆகையால் அவரை எப்படித் திருப்பி அனுப்பிவிடுவது என்று யோசிக்கலானாள். திக்கஜரே அதற்கு முன்பு அடிப்பாரம் போட்டுவிட்டார்.

பிராம்மணர் மறுபடியும் விமலாவிற்குப் பின்னால் வந்து முந்தானையைப் பிடித்து இழுத்தார். விமலா என்னவென்று கேட்டாள்.

"அது எவ்வளவு தூரமிருக்கும்?" என்று திணறிக் கொண்டு கேட்டார்.

"எது எவ்வளவு தூரம்?"

"அந்த ஆலமரந்தான்?"

"எந்த ஆலமரம்"

"அதுதான், அதன் கிட்டே, நீ பார்த்தாயே!"

"எதைப் பார்த்தேன்".

"ராத்திரியில் அந்தப் பெயரைச் சொல்லக்கூடாது".

நல்ல சந்தர்ப்பம் ஏற்பட்டுவிட்டதென்று விமலா கண்டாள். கம்பீரமான குரலில், "இதோ!" என்றாள்.

"எங்கே?" என்று பிராம்மணர் மிகவும் பயந்து போனவராய் கேட்டார்.

சைலேசுவரர் கோவிலுக்கு அருகேயிருந்த ஆலமரத்தைச் சுட்டிக்காட்டிக் கொண்டு விமலா, "அதோ தெரிகிறதே, அந்த ஆலமரந்தான்!" என்று மெதுவாகக் கூறினாள்.

திக்கஜருக்கு நடக்க முடியவில்லை. அரச இலைபோல நடுக்கலானார்.

"நெருங்கிவிட்டது!" என்றாள் விமலா.

"நான் இனிமேல் வர முடியாது" என்று வெட வெடவென்று நடுங்கிக் கொண்டு திக்கஜர் கூறினார்.

"எனக்கும் பயமாகத்தான் இருக்கிறது" என்றாள் விமலா.

அதைக் கேட்டதும்தான் தாமதம்; திக்கஜர் திரும்பி ஓட்டமெடுக்கத் தயாரானார்.

விமலா ஆலமரத்தின் பக்கம் பார்த்தாள். அதன் அடியில் ஏதோவொரு வெண்மையான வஸ்து இருந்தது. அது சைலேசுவரர் கோவில் காளையைத் தவிர வேறொன்றும் இல்லையென்று விமலாவிற்குத் தெரியும் ஆனால் திக்கஜரைப் பார்த்து, த"ிக்கஜரே, இஷ்ட தேவதைக்கு வேண்டிக் கொள்ளும்! ஆலமரத்தடியில் என்ன இருக்கிறது பார்த்தீரா?" என்றாள்.

"ஹே கோபா - அப்பா, கோபா!" என்று உளறிக் கொண்டு திக்கஜர் அவ்விடத்தைவிட்டு ஒரே ஓட்டமெடுத்தார்.

விமலாவிற்கு திக்கஜரின் சுபாவம் தெரியும். ஆகையால் அவர் கோட்டை வாசலில் போய்த்தான் நிற்பார் என்று தீர்மானித்தாள்; கவலையற்றவளாய், கோவிலை நோக்கிப் புறப்பட்டாள்.

விமலா எல்லாவற்றையும் பற்றி முன்யோசனை செய்து கொண்டுதான் வந்திருந்தாள். ஆனாலும் ராஜபுத்திரன் கோவிலுக்கு வந்திருப்பானோ என்ற சந்தேகம் ஏற்பட்டவுடனே மனத்தில் கலக்கமுற்றாள். யோசனை செய்து பார்த்தாள். ராஜபுத்திரன் அங்கே வந்து சந்திப்பதாக நிச்சயமாகச் சொல்லவில்லை. இந்த இடத்தில் நீங்கள் என்னைச் சந்திக்க முடியாவிட்டால், நீங்கள் என்னைப் பார்க்கவே முடியாது என்றுதான் சொல்லியிருந்தான். அதனால் கட்டாயம் சந்திப்பு உண்டு என்று அர்த்தமாகாது.

ஒருவேளை வரவில்லையென்றால் இவ்வளவு சிரமமும் வீண்தான். விமலா மனமுடைந்தவளாய், "இதேன் எனக்கு முன்பே தோன்றவில்லை? பிராம்மணரை அனுப்பியிருக்க வேண்டாமே! தனியாக இந்த இரவில் நான் எப்படித் திரும்பிப் போகப் போகிறேன்? சைலேசுவரா! எல்லாம் உன் செயல்!" என்று தனக்குத்தானே சொல்லிக் கொண்டாள்.

ஆலமரத்து நிழலை விட்டால் சைலேசுவரர் கோவில்தான். ஆலமரத்தின் அருகே போனாள். அதனடியில் வெண்மையாகத் தெரிந்த வஸ்து முன் இருந்த மாதிரி இல்லை. விமலா கொஞ்சம் ஆச்சரியம் அடைந்தாள்.

ஆலமரத்தடியை உற்று நோக்கினாள். மரத்தின் பின்புறத்தில் இருந்த யாரோ ஒரு மனிதனுடைய ஆடையின் ஒருபாகம் கண்ணில் பட்டது. விமலா பயந்து போனாள். வேகமாகக் கோவிலை நோக்கிச் சென்றாள். பலமாகக் கையால் கதவைத் தட்டினாள்.

கதவு மூடித் தாழிடப்பட்டிருந்தது.

"யார்?" என்று உள்ளேயிருந்து கம்பீரமான குரல் ஒன்று கேட்டது.

அந்த மௌனம் நிறைந்த கோவிலின் நடுவேயிருந்து "யார்?" என்று எதிரொலி கேட்டது.

விமலா தன் தைரியத்தை முழுவதும் கைக்கொண்டு "வழி நடையால் சிரமமடைந்த ஒரு ஸ்தீரி!" என்றாள்.

கதவு திறக்கப்பட்டது.

கோவிலில் விளக்குப் பளிச்சென்று எரிந்து கொண்டிருந்தது. எதிரே ஆஜானுபாகுவான மனிதன் ஒருவன் வாளேந்தியவனாய் நிற்பதைக் கண்டாள்.

பார்த்தவுடனே ஜகத்சிங் என்று அவள் தெரிந்து கொண்டாள்.

## பதினாறாம் அத்தியாயம்

## சைலேசுவரர் முன்னிலையில்

விமலா கோவிலுக்குள் நுழைந்தவுடன் முதலில் கொஞ்ச நேரம் பேசாமல் நின்றாள். பிறகு கைகூப்பி, சைலேசுவரரை வணங்கிவிட்டு, ராஜகுமாரனுக்கு வந்தனம் செய்தாள். இருவரும் மௌனமாக இருந்தார்கள்; யார் எதைச் சொல்லி முதலில் தங்கள் மனத்திலிருந்ததை வெளியிடுவதென்று தடுமாறினார்கள். இருவருக்கும் நிலைமை மிகவும் சங்கடமாக இருந்தது.

ஆனால் சமயா சமயங்களில் நிலைமையைச் சமாளிப்பதில் விமலா கை தேர்ந்தவள். கொஞ்சமாகச் சிரித்துக் கொண்டு, "ராஜகுமாரா! சைலேசுவரருடைய கிருபையால் தங்கள் தரிசனம் கிடைத்தது. தனியாக இந்தப் பிரதேசத்தில் இரவில் வந்ததால் மிகவும் பயந்து போனேன். இப்பொழுது, இந்தக் கோவிலில் உங்கள் முன்னே, தைரியம் அடைந்துவிட்டேன்".

"நீங்கள் எல்லோரும் சௌக்கியந்தானே?" என்று ஜகத்சிங் கேட்டான்.

ராஜகுமாரனுக்குத் திலோத்தமையிடத்தில் அன்பு இருக்கிறதா என்பதை முதலில் அறிந்து கொண்டு பிறகு எல்லாப் பேச்சும் பேசவேண்டுமென்று விமலா தீர்மானித்தாள்.

"சௌக்கியமும் மங்களமும் ஏற்படுவதற்காகத்தான் இங்கே சைலேசுவரரை ஆராதனை செய்துவிட்டுப் போகலாமென்று வந்தேன். எனக்கு முன்னால் என்னுடைய யஜமானரே அவரைத் திருப்தி செய்துவிட்டபடியால், அவர் என் ஆராதனையை இப்பொழுது ஏற்றுக் கொள்ளமாட்டார். ஆகையால் நான் திரும்பிப் போகிறேன். உத்தரவு கொடுக்க வேண்டும்".

"போகலாம். ஆனால் நீங்கள் தனியாகப்போவது உசிதமல்ல. நானும்கூட வருகிறேன்".

ஆயுள் முழுவதும் ராஜகுமாரன் ஆயுதப் பயிற்சி மட்டும் பெற்றுக் கொண்டிருக்கவில்லையென்பதை விமலா அந்த வார்த்தைகளிலிருந்து அறிந்தாள்.

"நான் தனியாகச் செல்வதில் என்ன கெடுதல்?"

"வழியில் அநேக பயங்கரமான ஆபத்துகள் இருக்கும்".

"அப்படியானால் நான் மகாராஜா மான்சிங்கிடம் போகிறேன்".

"எதற்காக?"

"எதற்காகவா? அவர் அனுப்பிய சேனாதிபதியின் மூலமாக வழிப்போக்கர்களின் பயம் இன்னும் தீரவில்லை, அவருக்குச் சத்துருக்களை அடக்கச் சக்தியில்லை, என்று சொல்லத்தான்!"

"ராஜபுத்திரன் சிரித்துவிட்டு, சேனாதிபதி என்ன பதில் சொல்லுவார் தெரியுமா? சத்துருவை வெல்வதற்கு தேவர்களாலும் முடிவதில்லை; மனுஷ்யர்களால் எப்படி முடியும்? உதாரணமாக, தபோவனத்தில் அன்று பரமசிவம் மன்மதனை எரித்துச் சாம்பலாக்கினார்; ஆனால் இன்று, ஒரு பட்சத்திற்குள், அவருடைய ஆலயத்திலேயே, மன்மதன் அயோக்கியத்தனம் செய்துவிட்டான் என்பான்!"

விமலா கொஞ்சம் நகைத்துக் கொண்டு, "யாரிடத்தில் அப்படி அயோக்கியத்தனமா நடந்து கொண்டான்?" என்று கேட்டாள்.

"சேனாதிபதியிடத்திலேயேதான்".

"மகாராஜா இப்பேர்ப்பட்ட நம்பத்தகாத சமாசாரத்தை எப்படி நம்புவார்?"

"எனக்குச் சாட்சி இருக்கிறது?"

"யார் சாட்சி?"

"நல்ல பெயர் பெற்ற நீங்கள்தாம் அம்மா!"

ராஜபுத்திரனின் வாக்கியம் முடிவதற்குமுன் விமலா குறுக்கிட்டு, "அடியாள் கெட்ட பேருடையவள்; என்னை விமலா என்றே சொல்லுங்கள்" என்றாள்.

"சரி - விமலாதான் சாட்சி!"

"விமலா அந்த மாதிரி சாட்சியம் கொடுக்க முடியாது".

"வாஸ்தவந்தான்! பதினைந்து நாட்களுக்குள், தான் சொன்ன சொல்லை மறப்பவள் எப்படி உண்மையான சாட்சியம் சொல்லப் போகிறாள்?"

"ஐயா, நான் என்ன வாக்குக் கொடுத்துவிட்டு மறந்து விட்டேன்? சொல்லுங்கள்".

"உங்கள் சிநேகிதியுடன் எனக்குப் பரிசயம் செய்து வைக்கிறேன் என்று சொல்லவில்லையா?"

விமலா உடனே வேடிக்கை மாதிரி விட்டுவிட்டுக் கம்பீரமாக, ராஜகுமாரா! "பரிசயம் செய்து வைப்பதற்குச் சிறிது யோசனையாயிருக்கிறது. பரிசயம் பெற்ற பிறகு நீங்கள் வருத்தமடைந்தால்...?" என்றாள்.

ராஜபுத்திரன் சிறிதுநேரம் யோசித்தான். அவனும் வேடிக்கை மாதிரியை மாற்றிவிட்டு, "விமலா, உண்மையாக, அவளுடன் எனக்குப் பரிசயம் ஏற்படுவதால் எனக்கு வருத்தம் உண்டாவதற்கு என்ன காரணம் இருக்கக்கூடும்" என்று கேட்டான்.

"இருக்கிறது".

ராஜபுத்திரன் மறுபடியும் சிந்தனையில் ஆழ்ந்தான். சற்றுநேரம் கழித்து மறுபடியும் பேசலானான்.

"எப்படியானாலும் சரி, நீங்கள் என் மனோபீஷ்டத்தைப் பூர்த்திச் செய்து வைக்க வேண்டும். நான் இப்பொழுதே தாங்க முடியாத மனோ வேதனையைத் தாங்கிக் கொண்டிருக்கிறேன். நீங்கள் சொல்வது போன்ற அதிகமான வேதனையை என்னால் தாங்க முடியாது. உங்கள் சந்தேகம் வாஸ்தவமானால் அதை எப்படியாவது நிவர்த்திக்க முயலவேண்டும். என் உள்ளத்திற்கு ஆறுதலைக் கொடுக்கும் ஒரு யோசனையைச் சொல்லுங்கள். விமலா! நீங்கள் வருகிறீர்களா என்ன என்று பார்ப்பதற்காக மட்டும் நான் இங்கே வரவில்லை. அந்தமாதிரி உபயோகமற்ற ஆவலைத் தீர்த்துக்கொள்ள இப்பொழுது எனக்கு சாவகாசங்கூடக் கிடையாது. இந்தப் பதினைந்து நாளாகக் குதிரையின் மேலேதான் இருந்தேன்; அதைத்தவிர, வேறு படுக்கையை நான் அறியேன். என் மனம் மிகவும் சஞ்சலம் அடைந்திருக்கிறதென்பதைத் தெரிவிக்கவே நான் இங்கே வந்தேன்".

"ராஜகுமாரா! நீங்கள் ராஜ நீதியில் கெட்டிக்காரர் அல்லவா? யோசனை செய்து பாருங்கள். இந்த யுத்தம் நடக்கும் சமயத்தில், நீங்கள் அடையக்கூடாத ஒரு பெண்ணிடம் மனத்தை வைப்பது உசிதமான காரியமா? இருவருக்கும் நன்மை உண்டாவதற்காகச் சொல்லுகிறேன். நீங்கள் என் சிநேகிதியைப் பற்றிய எண்ணத்தை மறக்க முயற்சி செய்யுங்கள்; யுத்தத்தில் உங்களுக்குக் காரியம் கைகூடும்"!

ராஜபுத்திரன் மனஸ்தாபத்துடன் சிரித்தான்.

"யாரை மறக்கிறது? உங்கள் சிநேகிதியின் உருவந்தான் ஒரேதரம் பார்த்தவுடனேயே என் உள்ளத்தில் ஆழமாகப் பதிந்துவிட்டதே! இந்த ஹிருதயம் எரியும்வரை அதிலிருந்து அவ்வுருவை நீக்க முடியாது உலகத்தில் என் மனத்தைக் கல்மனம் என்கிறார்கள். அந்தக் கல்மனத்தில் பதிந்துவிட்ட உருவத்தை, கல்லே உடைந்தால் ஒழிய, அதைவிட்டு அகற்ற முடியாது. யுத்தத்தைப் பற்றிப் பேசினீர்கள். விமலா! உங்கள் சிநேகிதியைக் கண்டபிறகு, நான் ஒரு பெரிய யுத்தத்தில்தான் ஈடுபட்டிருக்கிறேன். யுத்தரங்கத்திலும், கூடாரத்திலும், அவள் முகத்தை என்னால் மறக்க முடியவில்லை. என் சிரத்தைப் பேதிப்பதற்காகப் பட்டாணியனின் கத்தி கிளம்பும்பொழுதும் என் மனத்தில் இந்த நினைவுதான்; சாவதற்குமுன் அந்த முகத்தை ஒருதரம் பார்க்க முடியுமா என்ற ஏக்கந்தான் மனத்தில், விமலா, எங்கே போனால் நான் உங்கள் சிநேகிதியின் முகத்தைப் பார்க்க முடியும்?"

இதைக் கேட்ட பிறகு விமலா என்ன செய்ய முடியும்?

"என் சிநேகிதியை, மாந்தாரணக் கோட்டைக்குப் போனால், காண முடியும். திலோத்தமை வீரேந்திர சிங்கின் பெண்!"

காலசர்ப்பம் தீண்டினதுபோல் இருந்தது ஜகத்சிங்கிற்கு. தலை குனிந்துகொண்டு அவன் அசைவற்று நின்றான். வெகுநேரம் கழித்து ஓர் ஆழ்ந்த பெருமூச்சுடன், "நீங்கள் சொன்னது வாஸ்தவந்தான். திலோத்தமை என்னுடையவள் ஆக முடியாது. நான் யுத்தகளத்திற்குச் செல்லுகிறேன். என் சுகத்தைப் பற்றிய ஆசையைச் சத்துருவின் ரத்தத்தில் கைகழுவி விட்டுவிடுகிறேன்" என்றான்.

ராஜபுத்திரனுடைய காதலைக் கண்ட விமலா, "உங்களுக்குக் காதல் பெரிதாக இருந்தால், நீங்கள் திலோத்தமையை அடையக் கூடியவர்களே! ஒரே அடியாக ஏன் ஆசையைக் கைவிட வேண்டும்? விதி இன்று வைரியாக இருக்கலாம்; காலம் வந்தால், நாளை, விதி அனுகூலமாக இருக்கலாம்" என்றாள்.

ஆசையின் வார்த்தைகள் எப்பொழுதும் மதுரமாகவே இருக்கும், அந்த வேளையில், அது வந்து மனிதனின் காதில் மெதுவாக, இனிமையாக, "கனத்த மழை நீண்டு பெய்யாது. ஏன் கவலை கொள்ளுகிறாய்? நான் சொல்லுகிறதைக் கேள்" என்று சொல்லிற்று. விமலா மூலமாக ஆசை ஜகத்சிங்கின் காதில், "ஏன் துக்கப்படுகிறாய்? என் பேச்சைக் கேள்!" என்றது.

ஜகத்சிங் ஆசையின் பேச்சைக் கேட்டான். கடவுளின் கருத்தை யார் அறிய முடியும்? பிரம்மாவின் தலையெழுத்தை யார் படித்தறிய முடியும்? இந்த உலகத்தில் நடக்கக் கூடாதது என்ன இருக்கிறது? இவ்வுலகில் செய்ய முடியாததைக்கூடச் செய்து முடிப்பவர்கள் இல்லையா?

ஆசையின் வார்த்தைகளைக் கேட்ட ராஜபுத்திரன் பேசலானான். "எப்படியானாலும், இன்று என் மனம் மிகவும் நிலையற்றதாய் இருக்கிறது. என்ன செய்கிறதென்பதே எனக்குக் கொஞ்சங்கூட விளங்கவில்லை. எது கண்ணுக்குத் தெரியாமல் இருக்கிறதோ, எது நேரப்போகிறதோ, பிரம்மாவின் எழுத்தை யார் மாற்றப் போகிறார்கள்? இவ்வளவு மட்டுந்தான் நான் இப்பொழுது என் மனதை வெளியிட்டுக் கூற முடிகிறது. இந்தச் சைலேசுவரர் ஆணையாகச் சொல்லுகிறேன்; திலோத்தமையைத் தவிர வேறு எந்தப் பெண்ணிடமும் நான் ஈடுபடமாட்டேன்! நான் உங்களை ஒன்று கேட்டுக் கொள்ளுகிறேன். நடந்தவை யாவற்றையும் உங்கள் தோழியிடம் தெரிவிக்க வேண்டும். அதோடு இதுவும் சொல்ல வேண்டும். நான் இன்னும் ஒரே ஒரு வாரந்தான் அவளுடைய தரிசனத்தைக் கோரும் பிச்சைக்காரனாயிருப்பேன். இரண்டாவது வாரத்தில் அவளை ஸ்வீகரித்துக்கொண்டு விடுவேன்!"

விமலாவின் முகம் சந்தோஷத்தால் மலர்ச்சி அடைந்தது.

"என்னுடைய தோழியின் பதிலை நீங்கள் எவ்வாறு பெறுவீர்கள்?" என்று கேட்டாள்.

"உங்களை நான் அடிக்கடி உபரத்திரவிக்க விரும்பவில்லை. ஆனால் நீங்கள் மறுபடியும் என்னை இந்தக் கோவிலில் வந்து சந்தித்தால் நல்லது. ஜகத்சிங்கிடமிருந்து எப்பொழுதாவது பதில் உதவி பெற முடியும்".

"ராஜகுமாரா! நான் சுதந்திரம் கொண்டவள்தான். ஆனால் தனியாக, இந்தக் காட்டு வழியில் வருவது மிகவும் பயத்தைக் கொடுக்கிறது. ஒருவிதத் துணையுமின்றி இன்று வந்திருக்கிறேன். தற்சமயம் இந்தப் பிராந்தியத்தில் சத்துரு பயம் அதிகமாக இருப்பதால், மறுபடியும் வருவதென்றால் யோசனையாக இருக்கிறது".

ராஜகுமாரன் ஒரு நிமிஷம் யோசனை செய்துவிட்டு, "நான் உங்கள்கூட வருவதில் ஹானி இல்லையென்று தோன்றினால், நான் இப்பொழுது உங்களுடன்கூட மாந்தாரணம் வரை வருகிறேன். குறிப்பிடும் இடத்தில் நான் உங்களை எதிர்பார்த்துக் கொண்டு இருக்கிறேன். நீங்கள் உங்களுடைய தோழியின் பதிலைக் கேட்டுக் கொண்டு வந்து சொல்லுங்கள்" என்றான்.

விமலா சந்தோஷத்துடன், "அப்படியானால் போவோம்!" என்றாள்.

இருவரும் கோவிலை விட்டு வெளியே வந்தார்கள். அப்பொழுது கோவிலுக்கு வெளியே மனிதனின் காலடிச் சத்தம் கேட்டது. ராஜபுத்திரன் கொஞ்சம் ஆச்சரியம் அடைந்தான். விமலாவை நோக்கி, "உங்களுடன் கூட யாராவது வந்திருக்கிறார்களா?" என்று கேட்டான்.

"இல்லையே!" என்றாள் விமலா.

"அப்படியானால் அது யாருடைய காலடிச் சத்தமாயிருக்கக்கூடும்? எனக்குச் சந்தேகமாய் இருக்கிறது. யாரோ மறைந்திருந்து நம்முடைய சம்பாஷணையைக் கேட்டுக் கொண்டிருந்திருக்க வேண்டும்".

இப்படிச் சொல்லிக் கொண்டு ராஜபுத்திரன் வெளியே சென்று கோவிலின் நான்கு பக்கங்களையும் பிரதக்ஷிணம் செய்து வந்து தேடினான். யாரும் தென்படவில்லை.

## பதினேழாம் அத்தியாயம்

## வீரபஞ்சமி விரதம்

இருவரும் சைலேசுவரரை வணங்கிவிட்டு, சந்தேகத்துடன், மாந்தாரணக் கோட்டையை நோக்கிப் புறப்பட்டார்கள். கொஞ்ச நேரம் மௌனமாகவே சென்றார்கள். சிறிது தூரம் சென்றதும், ராஜகுமாரன் முதலில் பேச ஆரம்பித்தான்.

"விமலா! ஒரு விஷயம் கேட்க வேண்டுமென்று நான் மிகவும் ஆவல் உள்ளவனாக இருக்கிறேன். கேட்டால் நீங்கள் என்ன சொல்வீர்களோ?... சொல்ல முடியுமா?"

"என்ன?"

"நீங்கள் வேலைக்காரியல்ல என்று எனக்குத் தோன்றுகிறது".

"இந்தச் சந்தேகம் உங்கள் மனத்தில் எதனால் ஏற்பட்டது?" என்று விமலா கொஞ்சம் சிரித்துக் கொண்டு கேட்டாள்.

"வீரேந்திரசிங்கின் பெண், மகாராஜா மான்சிங்கின் நாட்டுப் பெண் ஆக முடியாது என்பதற்கு விசேஷமான காரணங்கள் இருக்கின்றன. அது மிகவும் ரகசியமான விருத்தாந்தம். நீங்கள் வேலைக்காரியாக இருந்து, அந்த ரகசிய சமாசாரத்தை எப்படி அறிந்தீர்கள்?"

விமலா பெருமூச்செறிந்தாள். பிறகு கொஞ்சம் சோர்ந்த குரலில், நான் உண்மையைச் சொல்லுகிறேன். "நான் வேலைக்காரியன்று. எதிர்பாராத முறையில் வேலைக்காரியாக இருக்கிறேன். அதிருஷ்டத்தை யார் குறைகூற முடியும்?" என்றாள்.

விமலா இப்படிப் பேசியதிலிருந்து அவள் மனத்தில் ஏதோ கலக்கம் ஏற்பட்டிருப்பதாக ராஜபுத்திரன் ஊகித்தான்; ஆகையால் அது சம்பந்தமாக வேறொன்றும் பேச்சு எடுக்கக்கூடாது என்று தீர்மானித்தான்.

விமலா தானாகவே, "என்னைப் பற்றி உங்களிடம் சொல்லுகிறேன். ஆனால் இப்பொழுது கூடாது... அதென்ன சத்தம்? பின்பக்கம் யார் இருக்கிறார்கள்?" என்றாள்.

அப்பொழுது அவர்களுக்குப் பின்னால் காலடிச் சத்தம் நன்றாகக் கேட்டது. இரண்டு பேர் ஒருவருக்கொருவர் காதோடு காதாய்ப் பேசிக் கொண்டதும் கேட்டது. அப்பொழுது அவர்கள் கோவிலை விட்டு மூன்று மைல் தூரம் வந்திருந்தார்கள்.

"எனக்கென்னவோ இப்பொழுது ரொம்ப சந்தேகம் ஏற்பட்டு விட்டது. நான் போய்ப் பார்த்துக் கொண்டு வருகிறேன்".

இப்படிச் சொல்லிவிட்டு, ராஜபுத்திரன் பாதையின் கொஞ்தூரம் திரும்பிப் போய்ப் பார்த்தான். பாதையின் இருபுறங்களையும் கூர்மையாகக் கவனித்துத் தேடினான். யாரும் தென்படவில்லை. திரும்பி விமலா இருந்த இடத்திற்கு வந்து, "யாரோ நம் பக்கத்தில் இருக்கிறார்கள் என்று நினைக்கிறேன். ஆகையால் நாம் மிகவும் மெதுவாகப் பேசுவது நல்லது" என்றான்.

இருவரும் மிகவும் தாழ்ந்த குரலில் பேசிக் கொண்டே சென்றார்கள். கடைசியாக மாந்தாரணக் கோட்டைக்கு முன் வந்து சேர்ந்தார்கள்.

"நீங்கள் இப்பொழுது கோட்டைக்குள் எப்படிப் போகப் போகிறீர்கள்? இராப்பொழுதாகையால் கோட்டை வாயில் பூட்டியிருக்குமே?" என்று ராஜகுமாரன் கேட்டான்.

"கவலைப்படவேண்டாம்! அதற்கு வேண்டிய ஏற்பாடு செய்து விட்டுதான் இந்த இடத்தைவிட்டுப் புறப்பட்டேன்".

ராஜபுத்திரன் சிரித்துக்கொண்டு, "திருட்டு வழி இருக்கிறதா?" என்றான்.

விமலாவும் சிரித்துக்கொண்டு "திருடன் இருக்கும்போது திருட்டு வழி வேண்டாமா?" என்றாள்.

கணம் பொறுத்து ராஜபுத்திரன் மறுபடியும், "இப்பொழுது நான் இன்னும் உள்ளே வருவது உசிதமன்று, கோட்டைக்குப் பக்கத்திலிருக்கும் இந்த மாந்தோப்பில் நான் உங்களை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன். உங்களுடைய தோழியிடம் இதை ஸ்பஷ்டமாகச் சொல்லுங்கள். பதினைந்து நாள்கள் கழிந்தோ, ஒரு மாதம் ஒழிந்தோ, நான் மறுபடியும் ஒரு தடவை அவளைப் பார்த்துக் கண் குளிர்கிறேன்".

"இந்த மாந்தோப்பு அவ்வளவு தனிமையான இடமல்ல. நீங்கள் என்னுடன் வாருங்கள்".

"எவ்வளவு தூரம் வரவேண்டும்?"

"கோட்டைக்குள் போவோம்!"

ராஜபுத்திரன் கொஞ்சம் யோசனை செய்தான்.

"விமலா! அது உசிதமல்ல. கோட்டையின் யஜமானருடைய அனுமதியின்றி, அவருடைய கோட்டைக்குள் நான் பிரவேசிப்பது சரியன்று".

"என்ன யோசனை?"

ராஜபுத்திரன் கர்வத்துடன் கூறினான்: "ராஜபுத்திரர்கள் எந்த இடத்திற்குப் போவதற்கும் யோசனை செய்ய மாட்டார்கள். மகாராஜா மான்சிங்கின் மகன் கோட்டையதிகாரியின் அனுமதியின்றி, திருடன்போல, அதில் நுழைவது உசிதமா என்று யோசித்துப் பாருங்கள்".

"நானல்லவா உங்களை உள்ளே கூட்டிக் கொண்டு போகிறேன்?"

"நீங்கள் வேலைக்காரியென்று நினைத்து நான் அப்படிச் சொல்லவில்லை. ஆனால், என்னை உள்ளே அழைத்துக் கொண்டு போவதற்கு உங்களுக்கு என்ன அதிகாரம் இருக்கிறது? சொல்ல முடியுமா?"

விமலா சிறிது நேரம் யோசித்தாள்.

"எனக்கென்ன அதிகாரம் என்று சொல்லாவிட்டால் நீங்கள் உள்ளே வரமாட்டீர்களோ?" என்று கேட்டாள்.

"ஒரு நாளும் வரமாட்டேன்?"

விமலா ராஜபுத்திரன் காதில் ஏதோ சொன்னாள்.

உடனே ராஜபுத்திரன், "போங்கள்! பின்தொடர்கிறேன்!" என்றான்.

"ராஜபுத்திரா! நான் வேலைக்காரி; என்னை, போ! என்று சொல்லவேண்டும்".

"அப்படியே ஆகட்டும்!"

ராஜபாட்டையைத்தாண்டி விமலா ராஜபுத்திரனைக் கூட்டிக் கொண்டு சென்ற பாதை, கோட்டை வாயிலுக்குக் கொண்டு விடுவது. கோட்டையின் பக்கத்தில் மாந்தோப்பு; கோட்டையின் நேர் வாசலிலிருந்து தோப்பு கண்ணில் படாது. ஆமோதர நதி அந்தப்புரத்திற்குப் பின் பக்கமாகப் போகிற வழியாகப் போனால், அது மாந்தோப்பில் கொண்டு விடும். விமலா நேர்பாதையைவிட்டு விலகி, ராஜபுத்திரனுடன் மாந்தோப்பில் நுழைந்தாள்.

மாந்தோப்பில் நுழைந்தது முதல் இருவருக்கும் முன் போலக் காலடிச்சத்தம் கேட்டது, உலர்ந்த சருகுகள் மிதி பட்டு நொறுங்குவது போன்ற சத்தம்.

"அதோ மறுபடியும் சத்தம்!" என்றாள் விமலா.

"நீங்கள் மறுபடியும் ஒரு நிமிஷம் இங்கே நில்லுங்கள். நான் போய்ப் பார்த்துவிட்டு வருகிறேன்" என்று ராஜபுத்திரன் சொன்னான்.

அந்தப்படியே வாளை உருவிக்கொண்டு சத்தம் வந்த திக்கை நோக்கிப் போனான். ஆனால் ஒன்றும் தென்படவில்லை. மாந்தோப்பில் அநேக விதமான காட்டுக் கொடிகள் முதலியவைகள் நிறைய மண்டிக் கிடந்தன. அதனாலும் மரங்களுடைய நிழல்களாலும் ஏற்பட்ட இரவின் இருட்டில் ராஜபுத்திரன் கண்ணில், முன்னால் கொஞ்ச தூரத்தில் இருப்பதுகூட, ஒன்றும் புலப்படவில்லை. பசுக்கள் உலர்ந்த இலைகளை மிதித்ததால் ஏற்பட்ட சத்தமாகத்தான் இருக்க வேண்டுமென்று எண்ணினான். எப்படி இருந்தாலும் சந்தேகத்தைத் தீர்த்துக்கொள்வது நல்லதென்று எண்ணி, ராஜகுமாரன் வாளும் கையுமாய் ஒரு மாமரத்தின்மேல் ஏறினான். மரத்தின் உச்சிக்குச் சென்று அங்குமிங்கும் பார்த்தான். வெகுநேரம் அப்படிக் கூர்ந்து நோக்கிய பிறகு, கடைசியாக, ஒரு பெரிய மாமரத்தின் இருண்ட கிளைகளின் நடுவில் இருவர் இருப்பதைக் கண்டான். அவர்களுடைய தலைப்பாகைகளில் நிலா விழுந்து கொண்டிருந்தது. அவை மட்டும் கண்ணில் பட்டன. அவயவங்கள் எல்லாம் இருட்டில் கண்ணில் படவில்லை. இன்னும் நன்றாக உற்று நோக்கியதில் மனிதர்களே என்று தீர்மானமாகத் தெரிந்தது. தான் பார்த்தது வெறும் பிரமை அன்றென்று தெளிந்த பிறகு, ஜகத்சிங் மெதுவாக மரத்தைவிட்டுக் கீழே இறங்கிச் சத்தமின்றி விமலாவிடம் வந்து சேர்ந்தான்.

"இப்பொழுது என்னிடம் இரண்டு ஈட்டிகள் இருந்தால்..." என்றான் விமலாவிடம்.

"அதை வைத்துக்கொண்டு என்ன செய்வது?"

"அவை இருந்தால் எதற்கென்று தெரியும்? நிலைமை ஒன்றும் நன்றாக இல்லை. தலைப்பாகையிலிருந்து, யாரோ ஒருவன் துராத்மா பட்டாணியன் நம்முடன் சுற்றிக்கொண்டு திரிகிறான்" என்று தெரிகிறது.

உடனே விமலாவிற்கு, பாதையில் கண்ட செத்த குதிரை, தலைப்பாகை, குதிரைப்படையின் காலடி அடையாளம், எல்லாம் நினைவிற்கு வந்தன.

அப்படியானால் நீங்கள் இங்கேயே இருங்கள், நான் கோட்டைக்குள்ளிருந்து ஈட்டிகள் எடுத்துக் கொண்டு வருகிறேன் என்று சொல்லிவிட்டு விமலா வேகமாகக் கோட்டைக்குள் சென்றாள். எந்த அறையிலிருந்துகொண்டு அன்றிரவு அவள் அலங்காரம் செய்துகொண்டாளோ, அதற்குக் கீழேயுள்ள ஓர் அறையின் திட்டி வாசல், மாந்தோப்பின் பக்கம் இருந்தது. விமலா தன் மடியிலிருந்து ஒரு சாவியை எடுத்து அதைத் திறந்தாள். பிறகு அங்கிருந்த ஜன்னல், கம்பியைப் பிடித்துச் சுவரின் பக்கமாக இழுத்தாள். ஜன்னல், கதவு நிலை உள்பட பூராவும், தனியே வந்து சுவரில் ஒரு பெரிய திறப்பைக் காட்டியது; கட்டிடம் அவ்வாறு அமைக்கப்பட்டிருந்தது. உள்ளேபோய் அதை மூடிக்கொண்டு விட்டாள். ஜன்னல் முன்போலவே திறப்பு மூடிநின்றது.

விமலா வேகமாக உள்ளே சென்று ஆயுத சாலையின் காவலாளியிடம், "நான் உன்னிடம் வந்துபோனதாக யாரிடமும் சொல்லாதே. எனக்கு இரண்டு ஈட்டிகள் வேண்டும் கொடு; திரும்பவும் கொண்டுவந்து கொடுத்துவிடுகிறேன் " என்றாள்.

வேலைக்காரன் ஆச்சரியமடைந்தான்.

"ஏனம்மா! ஈட்டியைக் கொண்டுபோய் நீங்கள் என்ன செய்யப் போகிறீர்கள்?" என்று கேட்டான்.

"இன்று எனக்கு வீரபஞ்சமி விரதம். அந்த விரதத்தைச் செய்தால் வீரபுத்திரர்கள் உண்டாவார்கள். அதற்காக இரவில் அஸ்திர பூஜை செய்யவேண்டும். நான் இப்படி பிள்ளைக்காசைப்பட்டு இதைச் செய்கிறேன்" என்று யாரிடமும் சொல்லாதே என்று விமலா சொன்னாள்.

கோட்டையில் இருந்த எல்லா வேலைக்காரர்களும் அவள் சொற்படிதான் நடக்கவேண்டும் ஆகையால் மறு வார்த்தை பேசாமல் அவன் இரண்டு ஈட்டிகளைக் கொண்டு வந்து கொடுத்தான்.

விமலா ஈட்டிகளை எடுத்துக் கொண்டு ஜகத்சிங்கிடம் வந்து சேர்ந்தாள். ராஜபுத்திரன் விமலாவிடமிருந்து ஈட்டிகளைப் பெற்றுக் கொண்டு, முன்போல, மரத்தின் மேலேறி, முன்பார்த்த மரத்தின் பக்கம் பார்த்தான். அங்கே அப்பொழுது ஒரே தலைப்பாகைத்தான் கண்ணில் பட்டது. ராஜபுத்திரன் ஓர் ஈட்டியை இடதுகையில் வைத்துக் கொண்டு, மற்றொன்றை வலது கையில் எடுத்து, மரத்தில் தெரிந்த தலைப்பாகையை நோக்கிக் குறி வைத்தான். தன் முழுபலத்துடன் ஓங்கி அதை வீசி எறிந்தான். மறுநிமிஷம் அந்த மரக்கிளைகளில் ஒரு சத்தம் கேட்டது. உடனே ஒரு பெருத்த பதார்த்தம் பூமியில் விழுந்த சத்தமும் கேட்டது. தலைப்பாகை மரத்தின்மேல் தென்படவில்லை. அதிலிருந்து அதை அணிந்த ஆள் மரத்திலிருந்து கீழே விழுந்து விட்டான் என்பதை ஜகத்சிங் அறிந்தான்.

ஜகத்சிங் வேகமாக மரத்தைவிட்டுக் கீழே இறங்கி, ஆள் விழுந்து கிடந்த இடத்திற்குச் சென்றான். ஒரு முகம்மதியப் போர்வீரன் ஆயுதபாணியாய் இறந்தவன்போலப் பூமியில் கிடப்பதைக் கண்டான். ஈட்டி அவனுடைய கண்ணுக்கருகே பாய்ந்திருந்தது.

அப்படிக்கிடந்த சரீரத்தில் உயிர் இல்லை என்பதையும் கண்டான். ஈட்டி கண்ணுக்கருகில் பாய்ந்து தலையைப் பிளந்துவிட்டது. இறந்தவனின் கவசத்தில் ஒரு கடிதம் இருந்தது. அதையெடுத்து ஜகத்சிங் நிலவொளியில் படித்துப் பார்த்தான். அதில் பின்வருமாறு எழுதப்பட்டிருந்தது:-

'கத்லுகானின் ஆணைக்குட்பட்டவர்கள் இந்தக் கடிதத்தை ஏந்தி வருபவன் சொல்லும் யாவற்றையும் செய்து தீரவேண்டும். கத்லுகான்'

விமலா சத்தத்தை மட்டும் கேட்டாளேயொழிய விவரங்கள் ஒன்றும் அவளுக்குத் தெரியவில்லை. ராஜபுத்திரன் அவளிடம் வந்து விஷயங்கள் அனைத்தையும் சொன்னான்.

"யுவராஜ்! இந்தச் சமாசாரம் முன்னமேயே எனக்குத் தெரிந்திருந்தால் ஈட்டியை நான் கொண்டு வந்து கொடுத்திருக்கவே மாட்டேன். இன்று நான் மகாபாதகத்தைச் செய்துவிட்டேன். ஜன்மம் முழுவதும் பிராயச்சித்தம் செய்து கொண்டாலும் போதாது" என்றாள் விமலா.

"சத்துருவை கொல்வதில் பாவமேது? அது தர்மம் அல்லவா!"

"யுத்த வீரர்கள் அந்த மாதிரி நினைக்க வேண்டியதுதான். ஆனால் நான் ஸ்திரீ ஜாதிதானே?" என்றாள் விமலா.

சற்று நேரம் கழித்து விமலா, "சரி, இனித் தாமதம் செய்தால் கெடுதல், கோட்டைக்குள் போக வேண்டும். நான் போய்க் கதவைத் திறந்து வைத்துவிட்டு வந்திருக்கிறேன்" என்றாள்.

இருவரும் வேகமாகக் கோட்டை அடிவாரத்திற்கு வந்தார்கள். விமலா முன்னும், ராஜபுத்திரன் பின்னுமாக உள்ளே நுழைந்தார்கள். பிரவேசிக்கும் பொழுது ராஜபுத்திரனுக்கு ஹிருதயமும் காலும் நடுங்கின. ஆயிரக்கணக்கான சேனைகளின் நடுவில் அவனுடைய மயிரிழைகூட அசையாது. அவனுடைய இன்பம் இருக்கும் ஆலயத்தில் பிரவேசிக்கும்பொழுது அவன் மார்பு அடித்துக் கொள்வானேன்?

விமலா உள்ளே நுழைந்ததும் பின்னால் கதவைச் சாத்திக் கொண்டு, ராஜபுத்திரனை முதலில் தன்னுடைய படுக்கையறைக்கு அழைத்துக் கொண்-டு போனாள். "நான் கொஞ்சம் உள்ளே போய் வருகிறேன். அதுவரை இங்கே இருக்க வேண்டும். இந்தக் கட்டிலில் சாய்ந்து கொள்ளலாம். வேறு யோசனை ஒன்றும் இல்லையானால் இதை நினைத்துக் கொள்ளுங்கள். பகவான்கூட ஆலிலையில்தான் படுத்துக் கொண்டிருக்கிறார்".

புறப்பட்டுப்போன ஒரு நிமிஷத்திற்கெல்லாம் விமலா மறுபடியும் பக்கத்திலிருந்த அறையின் கதவைத் திறந்து கொண்டு வந்து, "யுவராஜ்! இங்கே வாருங்கள்; ஒன்று சொல்லுகிறேன்; கேளுங்கள்!" என்றாள்.

ராஜகுமாரன் மார்பு மறுபடியும் அடித்துக் கொண்டது. அவன் கட்டிலைவிட்டு எழுந்து அடுத்த அறைக்குள் விமலா இருந்த இடத்திற்குப் போனான்.

விமலா அந்த நிமிஷம் மின்னல்போல மறைந்து போனாள். ராஜகுமாரன் சுற்று முற்றும் பார்த்தான். மணம் வீசிய அறை! வெள்ளி விளக்கு எரிந்து கொண்டிருந்தது. அறையின் ஓரத்தில் தலைகுனிந்து கொண்டு நின்றாள் திலோத்தமை!

## பதினெட்டாம் அத்தியாயம்

## கோட்டைக்குள் பட்டாணியர்

விமலா திரும்பிவந்து தன் அறையில் கட்டிலின்மேல் உட்கார்ந்தாள். அவள் முகம் சந்தோஷத்தால் மலர்ந்திருந்தது; தன் காரியம் இஷ்டப்படியே நடந்துவிட்டதென்று பூரிப்புக் கொண்டாள். அறையின் நடுவில் விளக்கு எரிந்து கொண்டு இருந்தது. எதிரில் கண்ணாடி. மாலையில் எவ்விதம் அலங்காரம் செய்து கொண்டாளோ அதேமாதிரி இருந்தாள். ஒரு நிமிஷம் கண்ணாடியில் தன் உருவத்தைப் பார்த்துக் கொண்டாள். மாலையில் தலைமயிரை எப்படி வளைத்துவிட்டுக் கொண்டிருந்தாளோ அதேமாதிரி இருந்தது அது. விசாலமான கண்களின் கடைகளில் அதே ஜோதி. இதழ்களில் தாம்பூலத்தின் சிவப்பு அப்படியேஇருந்தது. அந்தக் காதணிகளே உருண்ட தோள்வரையில் தொங்கின. விமலா பாதி படுத்து ஒருக்களித்த வண்ணம், கண்ணாடியில் தன் அழகைப் பார்த்துச் சிரித்தாள்.

விமலா, ஜகத்சிங் திரும்பிவருவதை எதிர்பார்த்த வண்ணமிருந்தாள். அந்தச் சமயத்தில் மாந்தோப்பில் கம்பீரமான தாரையின் சத்தம் கேட்டது. விமலா திடுக்கிட்டு எழுந்தாள்; பயந்து நடுங்கினாள். கோட்டை வாயிலைத் தவிர வேறெங்கும் அந்தச் சத்தம் கேட்கவே கேட்காது. இந்த இரவில் எதற்காக அந்தச் சத்தம்? தான் கோட்டையிலிருந்து வெளியே போனது முதல், திரும்பி வந்த வரையில் நடந்த சம்பவங்களெல்லாம் அவள் நினைவிற்கு வந்தன. இந்தச் சத்தம் ஏதோ ஓர் ஆபத்துக்கு அறிகுறி என்று தீர்மானித்தாள். அப்படிச் சந்தேகம் கொண்டவளாய் ஜன்னலருகே சென்று, மாந்தோப்புள்ள பக்கத்தில் பார்த்தாள். ஆனால் அங்கே விசேஷமாக ஒன்றும் தென்படவில்லை. விமலா கவலைகொண்டு தன் அறையைவிட்டு வெளியேறினாள். அவளுடைய அறை இருந்த பாகத்திலிருந்த முற்றம் ஒன்றில் மாளிகையின்மேல் மாடிக்குப் போகும்படி இருந்தது

விமலா அந்த் வழியாக மேல் மாடிக்குச் சென்றாள். அங்கிருந்து நாலு பக்கங்களிலும் கூர்மையாகக் கவனித்தாள்; ஆனால் அந்தக் கண இருளில் ஒன்றையும் பார்க்க முடியவில்லை. விமலா முன்னிலும் அதிகமாகக் கவலையடைந்தவளாய் மாடியின் கைப்பிடிச்சுவரின் ஓரம் சென்று, அதன்மேல் சாய்ந்து கொண்டு, கீழே குனிந்து கோட்டையின் அடிப்பாகம் வரையிலும் பார்த்தாள். அங்கும் ஒன்றும் தென்படவில்லை. கிளைகளின் இளம் தளிர்கள் பளிச்சென்று பச்சைக் காந்தியுடன் நிலவில் நனைந்து கிடந்தன. ஒவ்வோரிடத்தில் லேசான காற்றில் அசைந்து, மஞ்சள் வர்ணம் கொண்டவையாகத் தென்பட்டன.

அந்தக் காட்டுப் பிரதேசத்தில் நிலமுழுவதும் ஒரே இருட்டு; கிளை, இலைகளின் நிழல் இல்லாத ஒவ்வோரிடத்தில் மட்டும் நிலவு கீழேபட்டுக் கொண்டிருந்தது. ஆமோதர நதியின் சலனமற்றது போன்ற ஜலத்தின்மேல் நீல ஆகாயம், சந்திரன், நஷத்திரங்கள், எல்லாம் அப்படியே பிரதிபலித்து விளங்கின. தூரத்தில், அக்கரையில், வானத்தை முட்டிநின்ற கட்டிடங்களின் உருவங்கள், ஒவ்வோரிடத்தில் மாளிகையில் இருந்த வேலைக்காரனின் உருவம், இவைகளைத் தவிர வேறொன்றும் கண்ணில் தென்படவில்லை. மனச் சலிப்புடன் விமலா திரும்பிக் கீழே போக எண்ணியபொழுது, யாரோ பின் பக்கமிருந்து தன்னைக் கைவிரலால் தொட்டதுபோது அவளுக்குத் தோன்றிற்று. விமலா திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தாள். யாரோ, தான் முன் பின் அறியாத ஒருவன், ஆயுதபாணியாய் நின்று கொண்டிருந்தான். விமலா சித்திரத்தில் வரையப்பட்ட பதுமை போல அசைவற்றுப் போனாள்.

"சத்தம் செய்யாதே! அழகிய பெண்மணி அலறினால் நன்றாயிராது" என்றான் அவன்.

இப்படித் திடீரென்று விமலாவை வெலவெலக்கச் செய்த ஆள் பட்டாணிய உடை தரித்திருந்தான். அவனுடைய உடை ஆபரணங்களிலிருந்து அவன் தன் சேனையில் ஒரு முக்கியமான ஸ்தானம் வகிப்பவன் என்று தெரிந்தது அவனுக்கு வயது முப்பதிற்கு மேல் இராது. நல்ல தோற்றமுடையவனாக இருந்தான். அவனுடைய அழகிய நெற்றியின் மேல் அவன் தலையில் அமைந்த தலைப்பாகையில் ஒரு விலையுயர்ந்த வைரம் ஜொலித்துக் கொண்டிருந்தது.

விமலா தன் மனத்தைக் கொஞ்சம் திடப்படுத்திக் கொண்டு அவனைப் பார்த்தாள். அவனை ஜகத்திங்குடன் ஒப்பிடவே முடியாது. ஜகத்சிங்கைப் போல அவனுக்கு மார்பு விசாலமாகவோ விஸ்தாரமாகவோ இல்லை, ஆனால் அவனைப்போல வீரத்தை வெளிக்காட்டும் தேககாந்தி இருந்தது. சரீரமும் அழகாக இருந்தது. அவனுடைய விலையுயர்ந்த இடுப்பு பந்தனத்தில், பவழங்கள் பதித்த உறையில் குட்டை வாள் ஒன்று இருந்தது. கையில் உருவிய கத்தி, அவனிடம் வேறொன்றும் காணப்படவில்லை.

"இரையாதே! சத்தம் செய்தாயானால் உனக்குத்தான் ஆபத்து" என்றான் அந்தப் போர்வீரன்.

விமலா கணநேரந்தான் திகிலடைந்து நின்றாள். பிறகு நிதானமுள்ளவளாகி விட்டாள். போர் வீரனின் வார்த்தைகளிலிருந்து பொருளை உடனே கிரகித்துக் கொண்டாள்; விமலாவிற்குப் பின்னே கைப்பிடிச் சுவர்,

முன்னால் அவன்; கைப்பிடிச் சுவரின் கீழ் பள்ளம். அவளைப் பிடித்து அப்படியே கீழே தள்ளுவது அவனுக்குச் சிரமமான காரியமல்ல, அதை உடனே அறிந்தவளாய், "நீ யார்" என்று கேட்டாள் விமலா.

"நான் யார் என்று அறிவதால் உனக்கென்ன உபயோகம்?" என்றான் போர் வீரன்.

"நீ எப்படி இந்தக் கோட்டைக்குள் வந்தாய்? நீ திருடன் அல்லவே?" என்று விமலா கேட்டாள்.

"சுந்தரி! நான் திருடனல்ல".

"உன்னைப் பின்பற்றித்தான். நீ கதவைத் திறந்து வைத்திருந்தபோது நான் உள்ளே பிரவேசித்தேன். உன் பின்னாலேயே இங்கே மாடிக்கு வந்தேன்".

விமலா தன்னைத்தானே நொந்து கொண்டாள்.

"நீ யார்?" என்று மறுபடியும் கேட்டாள்.

"உன்னிடம் இப்பொழுது நான் யார் என்று தெரிவிப்பதில் ஆபத்து ஒன்றுமில்லை. சொல்லுகிறேன் கேள்: நான் பட்டாணியன்".

"அது நீ சொல்ல வேண்டியதில்லை. நீ பட்டாணிய ஜாதியை சேர்ந்தவன் என்பது பார்க்கிறபொழுதே தெரிகிறது. நீ யார் என்று கேட்கிறேன்".

"அடியேன் பெயர், ஆண்டவன் அருளில், உஸ்மான்கான்".

"உஸ்மான்கான் யார்? எனக்குத் தெரியவில்லையே!"

"உஸ்மான்கான் கத்லுகானின் சேனாதிபதி".

விமலாவின் உடம்பு நடுங்கலாயிற்று; எப்படியாவது தப்பித்துக் கொண்டு ஓடிப்போய் வீரேந்திரசிங்கிடம் தெரிவித்து விட வேண்டுமென்று ஆத்திரப்பட்டாள். ஆனால் அதற்கு ஒருவிதமான வழியும் தோன்றவில்லை. எதிரே எதிரியின் சேனாதிபதி, வழியை மறித்துக் கொண்டு நின்றிருந்தான். வேறு வழியின்றி விமலா, அவனைக் கூடியவரையில் பேச்சில் ஈடுபடுத்திப் பொழுது போக்க வேண்டுமென்று தீர்மானித்தாள். பின்னால் யாராவது வேலைக்காரிகள் இந்தப் பக்கம் வரமாட்டார்களா? என்று யோசித்து, "நீங்கள் இந்தக் கோட்டைக்குள் எப்படிப் பிரவேசித்தீர்கள்?" என்றாள்.

"வீரேந்திர சிங்குக்குச் சமாதானமாக ஒரு தூதனை அனுப்பியிருந்தேன். சாத்தியப்பட்டால் என்னைச் சைனியத்துடன் இங்கே வரும்படி பதில் எழுதிவிட்டார்".

"ஓகோ! இக்கோட்டை அரசன் உங்களுடன் சேராமல் மொகலாயர்களுடன் சேர்ந்திருக்கிறார் என்பதற்காக நீங்கள் இக்கோட்டையைப் பிடிப்பதற்காக வந்திருக்கிறீர்களோ? ஆனால் நீங்கள் தனியாக இருப்பதாகத் தெரிகிறதே!"

"இப்போழுது நான் ஒருவன்தான்".

"ஆகையால்தான் என்னை இவ்விடம் விட்டுப் போக விடமாட்டேன் என்கிறீர்களோ?" என்று விமலா குத்தலாக் கேட்டாள்.

இம்மாதிரி கேட்டால் ஒருவேளை, பெண் பிள்ளைக்குப் பயந்தவன் என்ற அபவாதத்திற்கு அஞ்சி, அவன் தன்னைப் போகவிட்டுவிடுவான் என்று எண்ணினாள்.

ஆனால் உஸ்மான்கான் கொஞ்சம் சிரித்துக்கொண்டு "உன்னருகேயிருக்கும் பொழுது உன் கடைக்கண்ணுக்குத்தான் கொஞ்சம் பயப்பட வேண்டியிருக்கிறது. வேறு பயமில்லை. நான் உன்னிடம் ஒரு விஷயம் யாசிக்க வேண்டியிருக்கிறது" என்றான்.

விமலா ஆவலுடன் உஸ்மான்கானின் முகத்தைப் பார்த்தாள். "உன் இடுப்பு முடியில் இருக்கும் சாவியை தயவுசெய்து எனக்குத் தானம் செய்தால் நல்லது. உன்னைப் பலாத்காரமாக அவமானம் செய்ய எனக்குச் சங்கோசமாக இருக்கிறது" என்றான் உஸ்மான்கான்.

சேனாதிபதியின் எண்ணம் நிறைவேறுவதற்கு அந்தச் சாவி மிகவும் முக்கியமானது என்பதை அறிய விமலாவைப் போன்ற புத்திசாலிக்கு அதிக நேரமாகவில்லை. அவளுக்கு ஒன்றும் தோன்றவில்லை. தான் கொடுக்காவிட்டால் அவன் பலாத்காரமாகப் பிடுங்கிக் கொள்வான் என்பது நிச்சயம். "ஐயா, நீங்கள் எப்படி கேட்கிறபடி சாவியை நானே கொடுக்காவிட்டால் நீங்கள் எப்படி அதை அடைவதாக உத்தேசம்!" என்று கேட்டாள் விமலா.

சொல்லிக் கொண்டே விமலா சாவியைத் துணியிலிருந்து அவிழ்த்தெடுத்துக் கையில் வைத்துக் கொண்டாள்.

"நீயாகச் சாவியைக் கொடுக்காவிட்டால் உன்னைத் தொட்டுப் பிடுங்கிக் கொள்வேன்!" என்று உஸ்மான்கான் கூறினான்.

"செய்யுங்கள்!" என்று சொல்லி விமலா திடீரென்று சாவியை மாந்தோப்பில் எறியப் போனாள். ஆனால் அதிலேயே கண்ணாயிருந்த உஸ்மான்கான் சட்டென்று பாய்ந்து, அவள் கையிலிருந்த சாவியை பிடுங்கிக் கொண்டான்.

ஒரு கையால் விமலாவைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு, மற்றொரு கையால் சாவியில் கட்டியிருந்த துணியைப் பல்லின் உதவிக்கொண்டு அவிழ்த்துத் தன்மடியில் வைத்துக் கொண்டான். அதன்பிறகு உஸ்மான் செய்ததைக் கண்டதும் விமலாவின் முகம் வெளுத்தது. "என்னை மன்னிக்க வேண்டும்" என்று சொல்லிக் கொண்டு அவன், துணியால் விமலாவின் இரண்டு கைகளையும் கட்டிக் கைப்பிடிச் சுவருடன் சேர்த்து இறுக்கிவிட்டான்.

"இது எதற்காக?" என்று விமலா கேட்டாள்.

"அன்பு மிகுதியால் செய்த காரியம்".

"இந்த அக்கிரமத்தின் பலனை நீ சிக்கிரம் அனுபவிப்பாய்"!

அவளை அப்படியே விட்டுவிட்டு உஸ்மான்கான் போய்விட்டான். விமலா, கெட்டியாகக் கத்த ஆரம்பித்தாள். ஆனால் ஒன்றும் உபயோகப்படவில்லை. ஒருவர் காதிலும்படவில்லை.

உஸ்மான் வந்த வழியாக இறங்கிப்போய், விமலாவின் அறைக்குக் கீழேயிருந்த அறையை அடைந்தான். பிறகு விமலா செய்தபடியே சாவியைக் கொண்டு கதவைத் திறந்தான். திறந்ததும் மெள்ளச் சத்தம் செய்தான். அதைக் கேட்டதும், மரங்களுக்கிடையே இருந்த ஒருவன் கால் செருப்பை எடுத்துவிட்டுச் சந்தடியின்றி உள்ளே நுழைந்து வந்தான். அவன் நுழைந்தவுடன் மற்றொருவன் வந்தான். இப்படியே கொஞ்ச நேரத்திற்குள் பல பட்டாணியப் போர்வீரர்கள் கோட்டைக்குள் நுழைந்து விட்டார்கள். பாக்கி வெளியேயிருந்த சிலரை நோக்கி உஸ்மான், "நீங்கள் வெளியே இருங்கள். நான் உங்களிடம் சொல்லியிருக்கிற சந்தேக சத்தம் கேட்டதும் கோட்டையை ஆக்கிரமித்துக் கொள்ளுங்கள்" என்றான்.

வெளியே இருந்தவர்கள் திரும்பிச் சென்றார்கள். உள்ளே வந்த ஆட்களுடன் உஸ்மான் மறுபடியும் சந்தடியின்றி மாடிக்கு ஏறி வந்தான். விமலாவைக் கட்டிப்போட்டிருந்த இடத்தில் ஓர் ஆளை நிறுத்தி, "இந்தப் பெண் ரொம்ப கெட்டிக்காரி; இவளை நம்பவே கூடாது. ரஹீம்ஷேக்! இவளிடம் நீ காவலாளியாக இரு. யாருடனாவது சேர்ந்து ஓடப்பிரயத்தனம் செய்தாலும், அல்லது உரக்கக் கத்தினாலும் பெண்ஹத்தி தோஷத்திற்குப் பயப்படாதே; தெரியுமா?" என்று உத்தரவிட்டான்.

"உத்தரவு!" என்றான் காவலாளி.

பட்டாணிய சைனியம் கோட்டையின் மற்றொரு பாகத்திற்குச் சென்றது.

## பத்தொன்பதாம் அத்தியாயம்

## விமலாவின் சாகஸம்

உஸ்மான் வேறிடத்திற்குப் போனதுதான் தாமதம். விமலா தப்பியோடுவதற்கு வேண்டிய யோசனை செய்ய ஆரம்பித்தாள்.

காவலாளியுடன் சற்றுநேரம் பேச்சுக் கொடுத்து வார்த்தையாடிக் கொண்டிருந்தாள். காவலாளியாகத்தான் இருக்கட்டும் அவன் யமதூதனாகத்தான் இருக்கட்டுமே ஓர் அழகான பெண்ணுடன் பேசிக் கொண்டிருக்க யார் இஷ்டப்படாமல் இருப்பார்கள்? முதலில் அவனுடன் பல பொது விஷயங்களைப் பற்றிப் பேசினாள். கொஞ்சம் கொஞ்சமாகக் காவலாளியின் ஊர், பெயர், வீடு, உத்தியோகம், சுகதுக்கங்கள் எல்லாவற்றையும் கிரகித்தாள். தன் சொந்த விஷயமாக விமலா இவ்வளவு சிரத்தை எடுத்துக் கொண்டதில் காவலாளி மிக்க சந்தோஷமடைந்தான் தன் வேலையின் பலனைக் கண்ட விமலா தன் தூணியிலிருந்த அஸ்திரங்களை ஒவ்வொன்றாகப் பிரயோகம் செய்ய ஆரம்பித்தாள். ஒன்று அவளுடைய மிருதமயமான ரஸப் பேச்சு; மற்றொன்று பதில் சொல்ல முடியாத அவளுடைய கடைக்கண் பாய்ச்சல்; பாவம்! காவற்காரன் ஒரேயடியாகத் தொலைந்தே போனான். அவன் இளகித் தளர்ந்து போனான் என்று கண்டதும், விமலா அவனை முழுதும் அடித்து வீழ்த்துவதற்கு வேண்டிய வேலையை ஆரம்பித்தாள்.

"ஷேக்ஜி! எனக்கு எவ்வளவு பயமாயிருக்கிறது தெரியுமா? நீங்கள் இங்கேயே இருக்கமாட்டீர்களா?" என்று மெல்லிய குரலில் கெஞ்சினாள்.

காவற்காரன் தன் ஜன்மம் கடைத்தேறி விட்டதாக எண்ணி அவள் அருகில் வந்தான். விமலா வேறு சில பேச்சுகள் பேசித் தன் மருந்து எவ்வளவு தூரம் வேலை செய்திருக்கிறதென்று பார்த்தாள். காவற்காரன் அவளது முகத்தையே பார்த்து விழித்துக் கொண்டிருந்தான்.

"ஐயோ பாவம்! உங்களுக்கென்ன இப்படி வியர்க்கிறதே! என்னை வேண்டுமானால் கொஞ்சம் அவிழ்த்து விடுங்கள். உங்களுக்கு விசிறுகிறேன். பிறகு மறுபடியும் கட்டிப் போட்டு விடலாம்" என்றாள் விமலா.

ஷேக்ஜியின் முகத்தில் வியர்வையும் இல்லை ஒன்றுமில்லை. ஆனால் விமலா இருக்கிறதென்று சொல்லும்போது என்ன செய்கிறது? எப்படி இல்லையென்கிறது? மேலும் அப்பேர்ப்பட்ட கையால் அவள் விசிறினால் அதை அனுபவிக்கக் கொடுத்து வைக்க வேண்டாமா? அந்தப் பாக்கியம் மறுபடியும் கிடைக்குமா? இந்த யோசனைகள் மேலிட, காவற்காரன் அவளுடைய கட்டுகளை அவிழ்த்துவிட்டான். கட்டியிருந்த துணியாலேயே விமலா கொஞ்ச நேரம் அவனுக்கு விசிறினாள். பிறகு மிகவும் சாவதானமாக அதைத் தன்மேலே போர்த்துக் கொண்டாள். மறுபடியும் அவளைக் கட்டுவதைப் பற்றிப் பேச்செடுக்கக்கூடக் காவலாளிக்கு முகமில்லாமல் போயிற்று. அதற்கு மற்றொரு காரணமும் உண்டு. துணி அவளைக் கட்டும் கயிறாக இல்லாமல், அவளுடைய உடல்மேல் உறவே, அவள் அழகு இன்னும் கொஞ்சம் எடுத்து விளங்கிற்று. அதைக் கண்ணாடியில் பார்த்து விமலா தனக்குத்தானே சிரித்துக் கொண்டாள். அதைப்பார்த்து காவல்காரன் பேச்சற்றுப்போய் ஏங்கி நின்றான்.

"ஷேக்ஜி, உம் மனைவிக்கு உம்மேல் பிரியமில்லையோ?" என்று கேட்டாள் விமலா.

"ஷேக்ஜி கொஞ்சம் ஆச்சரியத்துடன் ஏன்?" என்றான்.

"பிரியம் இருந்தால், இந்த வசந்தகாலத்தில் (அது கொடுங்கோடை; மழைகாலத்தின் ஆரம்ப சமயம்) உம் போன்றவர்களைப் பிரிந்து யார் உயிருடன் இறக்கச் சகிப்பார்கள்?"

ஷேக்ஜி ஆழ்ந்த பெருமூச்சு விட்டான்.

விமலாவின் அம்பறாத் தூணியிலிருந்து அப்பொழுது ஒரு கொடிய விஷபாணம் வெளியில் வந்தது

"ஷேக்ஜி! எனக்குச் சொல்ல வெட்கமாக இருக்கிறது. நீர் என் கணவராக இருந்தால், நான் உம்மை யுத்தத்திற்குப் போக விடவே மாட்டேன்".

காவற்காரன் மறுபடியும் பெருமூச்சறிந்தான்.

"நீர் என் புருஷராக இருந்தால் – என்று சொல்லி விமலா ஒரு குறிப்பான பெருமூச்சை வெளியேவிட்டாள்; தன் கூர்மையான கோணல் கடைப்பார்வையை அவன்மேல் மேன்மேலும் வீசினாள் காவற்காரனின் தலை சுழன்றது. அவன் கொஞ்சம் கொஞ்சமாக நகர்ந்து விமலாவிடம் நெருங்கினான். விமலாவும் அவன் திக்கில் நகர்ந்தாள்.

விமலா தன் கோமளமான கரத்தைக் காவற்காரனின் கைமேல் வைத்தாள். காவற்காரன் மதியிழந்து மழுங்கிப் போனான்.

"சொல்லக்கூட வெட்கமாக இருக்கிறது. நீர் ஜயத்துடன் திரும்பும்போது, என் நினைவு, உமது மனத்தில் இருக்குமா?"

"உன்னை மனத்தில் வைத்துக் கொள்ளாமல்!"

"உமது மனத்தில் இருக்கும் சமாசாரத்தைப் பூராவும் எனக்கு நீர் சொல்ல வேண்டும்".

"சொல்லக்கூடாதே".

"சொல்லக்கூடாதா?"

"ஊஹும்! நான் ஒரு யஜமானிடம் வேலைக்காரன்".

"எனக்கு ஓர் ஆசை. பாபியான என் யஜமானனை விட்டு விட்டு உம்மிடம் வந்துவிடலாமென்று பார்க்கிறேன்".

மறுபடியும் அவனை ஒரு மோகனப் பார்வை பார்த்தாள். காவற்காரன் களிக்கூத்தாடினான்.

"போவோம்!" என்றான்.

"திக்கஜரைப் போல உலகத்தில் பண்டிதர்கள் எவ்வளவோ பேர் இல்லையா என்ன?"

"கூட்டிக் கொண்டு போவீரோ இல்லையோ!"

"கூட்டிக் கொண்டு போகாமலா? உன் தாஸனாக இருக்கிறேன்".

"இந்தப் பிரியத்திற்கு உமக்கு நான் என்ன பதில் செய்யப் போகிறேன்? இதை அடையாளமாக வைத்துக் கொள்ளும்".

இப்படிச் சொல்லி, தன் கழுத்திலிருந்த ஒரு தங்கச் சங்கிலியை எடுத்து விமலா அவன் கழுத்தில் போட்டாள் காவற்காரன் சரீரத்துடனேயே சுவர்க்கத்திற்குப் போய்விட்டான்.

"ஒருவர் மாலையை மற்றொருவர் அணிந்து கொண்டால் இருவருக்கும் கல்யாணம் ஆகிவிட்டதாக அர்த்தம் என்று எங்கள் சாஸ்திரம் சொல்லுகிறது" என்றாள் விமலா.

காவற்காரனின் கறுத்த தாடியின் இருளிலிருந்து பற்கள் வெளிவந்து தெரிந்தன.

"அப்படியானால் உனக்கும் எனக்கும் கல்யாணம் ஆகிவிட்டதா?"

"ஆமாம்!" என்று சொல்லிக் கொண்டு கணநேரம் விமலா ஏதோ யோசித்துக் கொண்டு அசைவற்று நின்றாள்

"என்ன யோசிக்கிறாய்?" என்று கேட்டான் காவலாளி.

"எனக்கு இந்த ஜன்மத்தில் சுகம் கிடையாதென்று என் தலையில் எழுதியிருக்கிறது நீங்கள் இந்தக் கோட்டையை ஜயித்துக் கொண்டு போக முடியாது!"

"அதில் ஒன்றும் நீ சந்தேகப்படாதே. இந்த நிமிஷம் ஜயித்துவிடுவோம்" என்று காவலாளி கர்வத்துடன் கூறினான்.

"முடியாது. அதில் ஓர் ரகசியம் இருக்கிறது".

"என்ன ரகசியம்?"

"அதை உம்மிடம் சொல்லி விடுகிறேன்; அதனால் நீங்கள் எப்படியாவது கோட்டையைப் பிடியுங்கள்".

"சரி!" என்று காவலாளி ரகசியத்தை அறியத் தயாராக நின்றான். விமலா வாயெடுத்துப் பேச ஆரம்பித்தவள் சங்கோசப்படுவது போலத் தயங்கினாள். காவலாளி ஆவல் மீறினவனாய் "என்ன சமாசாரம், சொல்லேன்!" என்றான்.

"உங்களுக்குத் தெரியாமல் கோட்டையைச் சுற்றி ஜகத்சிங் பதினாயிரம் பேர் அடங்கிய சேனையைக் கொண்டு வந்து வைத்திருக்கிறான். நீங்கள் இன்று ரகசியமாக வருவதை அறிந்து அவர்கள் முன்பே இங்கு வந்துவிட்டார்கள். கோட்டையைப் பிடித்து கவலையற்றுத் திரும்பும்படியான வழியைத் தேடிக் கொள்ளுங்கள்; அவ்வளவுதான் சொல்லுவேன்!"

ஒருகணம் காவலாளி ஒன்றும் பேசாமல் நின்றான். பிறகு, "யார் சொன்னார்கள்?" என்றான்.

"இந்த விஷயம் கோட்டையிலிருக்கும் எல்லோருக்கும் தெரியும் நானும் கேள்விப்பட்டேன்".

காவலாளி பரம சந்தோஷமடைந்தவனாய், "நீ இன்று என்னைப் பெரிய ஆசாமியாக்கிவிட்டாய் தெரியுமா? நான் இப்பொழுதே சேனாதிபதியிடம் சென்று சொல்லிவிட்டு வருகிறேன். சட்டென்று ஜாக்கிரதை செய்து கொள்வார். நீ இங்கேயே இரு; வெகு சீக்கிரமாக வருகிறேன்" என்றான்.

விமலாவிடம் காவலாளிக்கு மனத்தில் எள்ளளவு சந்தேகமும் ஏற்படவில்லை.

"நீர் வருவீரோ இல்லையோ?"

"வராமல்? இதோ வந்துவிடுகிறேன்"

"என்னை மறந்துவிடக்கூடாது?"

"இல்லை. இல்லை".

"ஞாபகம்!"

"கவலைப்படாதே!" என்று சொல்லிக் கொண்டு காவலாளி வெளியே ஓடினான்.

காவலாளி கண்ணைவிட்டு மறைந்ததும் விமலாவும் எழுந்து ஓடினாள். உஸ்மான்கான் சொன்னது உண்மைதான். விமலாவின் கடைக்கண்ணில்தான் ஆபத்து.

## இருபதாம் அத்தியாயம்

## வீரேந்திரன் வீழ்ச்சி

விடுதலையடைந்தவுடன் விமலா தன் முதல் காரியம், வீரேந்தினிடம் சென்று, விஷயத்தைத் தெரிவிப்பதே. மேல் மூச்சு வாங்க, வீரேந்திரசிங்கின் படுக்கையறையை நோக்கி ஓடினாள். பாதிவழி போய்க் கொண்டிருக்கும்பொழுதே, "அல்லா அல்லா - ஹோ..." என்று பட்டாணியர் கூச்சலிட்டது அவள் காதில் கேட்டது.

இதென்ன பட்டாணியரின் ஜயகோஷமா? என்று தனக்குள் சொல்லிக் கொண்டு விமலா திடுக்கிட்டுப் போய் விசனத்தில் ஆழ்ந்தாள். உடனே அசாத்தியமான கூக்குரல் சத்தம் கேட்டது. கோட்டையிலுள்ளவர்கள் எல்லோரும் விழித்துக் கொண்டு விட்டார்கள் என்று விமலா அறிந்தாள்.

பயத்தால் பீடிக்கப்பட்டவளாய், வீரேந்திரசிங்கின் அறையில் போய்ப் பார்த்தாள். எல்லாம் ஒரே அமர்க்களமாயிருந்தது. பட்டாணிய சைனியம் கதவை உடைத்துக் கொண்டு உள்ளே நுழைந்திருந்தது. வீரேந்திரசிங்கின் கைகள் இறுகக் கட்டப்பட்டிருந்தன. அவர் கையில் உருவிய கத்தி இருந்தது; உடம்பெல்லாம் ரத்தம்! அவர் வெறி பிடித்ததுபோல, வாளை வீசிக் கொண்டிருந்தார். ஆனால் ஒரு தடிப் பட்டாணியன், தன் கை வாளால் அவர் கையிலிருந்த வாளைக் கீழே நழுவச் செய்துவிட்டான். வீரேந்திரன் கைதியாயிருந்தார்.

விமலா இதையெல்லாம் பார்த்ததும், இனிமேல் ஒன்றும் பிரயோஜனமில்லையென்று அவ்விடத்தை விட்டு வெளியேறினாள். திலோத்தமையைக் காப்பாற்ற வேண்டும்! விமலா அவளிருக்குமிடத்திற்கு ஓடினாள். திலோத்தமையின் அறைக்குச் செல்வது அசாத்தியமென்பதை வழியில் அறிந்தாள். எங்கும் பட்டாணியர் வியாபித்து விட்டார்கள். கோட்டை பட்டாணியர் கைவசமாகி விட்டதென்பது தெளிவாயிற்று.

விமலா பார்த்தாள். திலோத்தமையின் அறைக்குப் போக முயன்றால் நிச்சயம் பட்டாணியர் கையில் அகப்பட்டுக்கொள்ள வேண்டியதுதான்; ஆகையால் அந்தப் பக்கம் போகாமல் திரும்பினாள். என்ன செய்வது என்று கவலையுடன் கொஞ்ச நேரம் யோசித்தாள். இந்த ஆபத்தான நிலைமையைப் பற்றித் திலோத்தமைக்கும் ஜகத்சிங்கிற்கும் எப்படிச் செய்தி சொல்வது என்பது அவளுக்கு விளங்கவில்லை.

விமலா ஓர் அறையில் நின்று கொண்டு இந்த மாதிரி யோசித்துக் கொண்டிருக்கும்போதே, சில பட்டாணியர் பல அறைகளைக் கொள்ளையடித்துவிட்டு, அவள் நின்ற அறைக்கு வந்து சேர்ந்தார்கள். விமலா மிகவும் பயமடைந்தவளாய் நடுநடுங்கிப் போனாள். ஓர் ஓரத்தில் ஒளிந்து கொண்டாள். பட்டாணியர் அறையிலிருந்து சாமான்களையெல்லாம் சோதனை செய்து கொள்ளையடிக்க ஆரம்பித்தார்கள். விமலா திடப்படுத்திக் கொண்டு அங்கேயே நின்றாள். அவளுடைய தைரியம் ஆபத்துக் காலங்களில் அதிகமாகும் இயல்புடையது. கொள்ளைக்காரர்கள் தங்கள் வேலையில் ஈடுபட்டிருக்கும்பொழுது ஒருவருக்கும் தெரியாமல் அறையை விட்டு வெளியே நழுவிவிட்டாள். அவ்விடத்தைவிட்டு விமலா கொஞ்ச தூரம் போனாள்; யாரோ பின்னால் அவளுடைய கையைப் பிடித்துக் இழுத்தார்கள்.

விமலா திரும்பிப் பார்த்தாள். "ரஹீம்சேக்! என்ன ஓட்டமெடுத்து விட்டாய்! எங்கே ஓடுகிறது?" என்றான் அவன்.

இரண்டாம் தடவை அவனிடம் அகப்பட்டுக் கொண்டு விட்டோமேயென்று விமலா கலங்கினாள். ஆனால் கணநேரம்தான் அந்த கலக்கம். அவள் முகம் மறுபடியும் பூர்ணமாக மலர்ந்தது. இவன் மூலமாகவே என் காரியத்தைச் சாதித்துக் கொள்ளுகிறேன் என்று தனக்குள் சொல்லிக் கொண்டாள். "கத்த வேண்டாம். மெல்ல வெளியே போவோம்!" என்று அவனுக்குப் பதில் சொன்னாள்.

அப்படிச் சொல்லிக்கொண்டே அவன் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு வெளியே போக ஆரம்பித்தாள். ரஹீம் முழுமனதுடன் அவளைப் பின்தொடர்ந்தான். அவனை ஒரு தனி இடத்திற்குக் கூட்டிக் கொண்டு போய், "சீச்சீ! என்ன காரியம் செய்தீர்கள்! என்னை அங்கே இருக்கச் சொல்லிவிட்டு எங்கே போனீர்கள்! நான் உங்களைத் தேடிக் கொண்டு எங்கெல்லாம் அலைகிறது?" என்று சொல்லிவிட்டு அவனை ஒரு பார்வை பார்த்தாள்.

ஷேக்ஜியின் சந்தேகம் பறந்தது. "ஜகத்சிங் வந்திருக்கும் சமாசாரத்தை நம் சேனாதிபதியிடம் சொல்லுவதற்காகப் போனேன். சேனாதிபதியைக் காணமுடியவில்லை. நீ இருந்த இடத்திற்குத் திரும்பி வந்து பார்த்தேன்; உன்னைக் காணோம். உடனே உன்னைத் தேடிக் கொண்டு புறப்பட்டேன்" என்று ரஹீம் சொன்னான்.

"நீங்கள் தாமதம் செய்ததைப் பார்த்ததும் நீங்கள் என்னை மறந்து போய்விட்டீர்கள் என்றே நினைத்தேன். நல்லவேளை, சந்தித்து விட்டோம். இனிமேல் தாமதம் செய்யக்கூடாது. கோட்டை உங்கள் கைவசம் இருக்கும்பொழுதே நாம் இந்த இடத்தைவிட்டு ஓடிப்போவது நல்லது" என்றாள் விமலா.

"இப்பொழுது வேண்டாம்; காலையில் போவோம்; நான் சொல்லிக் கொள்ளாமல் எப்படி வருகிறது? காலையில் சேனாதிபதியிடம் உத்தரவு பெற்றுக் கொள்ள வேண்டும்".

"அப்படியானால் உடனே போங்கள். நான் அதற்குள் என் நகைகள், என்னென்ன இருக்கின்றனவோ, அவைகளையெல்லாம் எடுத்துக் கொள்ளுகிறேன். இல்லாவிட்டால் சிப்பாய்கள் யாராவது அவற்றைக் கொள்ளையடித்துக் கொண்டு போய்விடுவார்கள்."

ரஹீம், "சரி" என்றான்.

விமலா சொன்னதுகூட உண்மையாகவே போயிற்று. கொஞ்ச நேரத்திற்கெல்லாம், விமலா கொஞ்ச தூரம் போவதற்குள் ஒரு சிப்பாய்க் கூட்டம் எதிர்ப்பட்டது.

விமலாவைக் கண்டார்களோ இல்லையோ, அவர்கள் அட்டகாசம் செய்து கொண்டு, "அடே, நல்ல வேட்டை அகப்பட்டது!" என்று கத்தினார்கள்.

"சகோதரர்களே, உங்கள் காரியத்தைக் கவனியுங்கள். இங்கே ஒன்றும் தலையிட வேண்டாம்" என்றான் ரஹீம்.

அதைக் கேட்டு சிப்பாய்கள் சும்மா இருந்தார்கள். ஒருவன் "ரஹீம்! நீ அதிருஷ்டக்காரப் பயல்!" என்றான்.

ரஹீமும் விமலாவும் வேறு பக்கம் சென்றார்கள். அவள் அவனைத் தன்னுடைய அறைக்குக் கீழேயிருந்த அறைக்குக் கூட்டிக் கொண்டு போய், "இதுதான் என் அறை; இதிலிருக்கும் சாமான்களில் எவையெவை நமக்கு வேண்டுமோ அவைகளையெல்லாம் சேகரித்து வையுங்கள்; இதற்குமேலே என் யஜமானியின் அறை; அதிலிருந்து நகையெல்லாம் எடுத்துக் கொண்டு இதோ வந்துவிடுகிறேன்" என்று சொல்லிவிட்டு அவனிடம் ஒரு சாவியைக் கொடுத்தாள்.

ரஹீம் அறையில் இருந்த திரவியம், சாமான்கள் இவைகளைக் கண்டு பரம சந்தோஷமடைந்தான். அவனுக்கு விமலாவிடம் கொஞ்சம்கூட சந்தேகம் ஏற்படவில்லை. விமலா அறையைவிட்டு வெளியே வந்து சட்டென்று வெளிப்பக்கம் சங்கிலியை இழுத்துத் தாழ்பாள் போட்டுவிட்டாள். ரஹீம் அறையில் கைதியானான்.

விமலா அங்கிருந்து பதைத்துக் கொண்டு மேலே சொன்றாள். திலோத்தமையின் அறைக்குப் போகும் பிரத்தியேகமான பாதை பக்கம் போனாள். அங்கு இன்னும் பட்டாணியர் பிரவேசிக்கவில்லை. ஜகத்சிங்கிற்கும் திலோத்தமைக்கும் கோட்டையில் நடந்த விபரீதங்கள் தெரியுமா இல்லையா என்பது தெரியவில்லை. விமலா திலோத்தமையின் அறையில் உடனே நுழையாமல், கதவின் நடுவே இருந்த ஒரு துவாரத்தின் வழியே உள்ளே பார்த்தாள். அவர்கள் நிலைமையைக் கண்டு கொஞ்சம் ஆச்சரியமடைந்தாள்.

திலோத்தமை கட்டிலில் படுத்துக் கொண்டு இருந்தாள். ஜகத்சிங் பக்கத்தில் நின்று கொண்டிருந்தான்; மௌனமாக அவள் முகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தான். திலோத்தமை அழுது கொண்டிருந்தாள். ஜகத்சிங்கும் தன் கண்களைத் துடைத்துக் கொண்டிருந்தான்.

அவர்களுடைய பிரிவினையின் பிரலாபம் அது என்று விமலா அறிந்தாள்.

## இருபத்தோராம் அத்தியாயம்

## ஜகத்சிங் கைது

ஜகத்சிங் விமலாவைப் பார்த்து, "அதென்ன சத்தம்?" என்று கேட்டான்.

"அது பட்டாணியரின் ஜயகோஷம். சீக்கிரமாக நாம் ஏதாவது உபாயம் செய்ய வேண்டும். இன்னும் அரை வினாடியில் சத்துருக்கள் இந்த இடத்திற்கு வந்துவிடுவார்கள்" என்றாள் விமலா.

ஜகத்சிங் ஒரு நிமிஷம் யோசனை செய்தான். பிறகு "வீரேந்திரசிங் என்ன செய்கிறார்?" என்று கேட்டான்.

"அவர் சத்துருக்களின் கையில் கைதியாக இருக்கிறார்"!

திலோத்தமை அலறிக் கொண்டு படுக்கையில் மூர்ச்சையாகி விழுந்தாள்.

ஜகத்சிங் மனங்கலங்கி விமலாவைப் பார்த்து, "திலோத்தமையைக் கவனியுங்கள் சட்டென்று!" என்றான்.

உடனே விமலா தண்ணீர் கொண்டு வந்து திலோத்தமையின் கழுத்திலும் முகத்திலும் கன்னங்களிலும் தெளித்து விசிற ஆரம்பித்தாள். சத்துருக்களின் கோலாகல சத்தம் அருகில் நெருங்கிவிட்டது. விமலா அழ ஆரம்பித்தாள்.

"ஐயோ வந்துவிட்டார்களே! ராஜபுத்திரா! இப்பொழுது என்ன செய்வது?"

ஜகத்சிங் கண்களிலிருந்து நெருப்புப் பொறி பறந்தது.

"நீங்கள் தனியாக என்ன செய்வீர்கள்? உங்கள் தோழியைக் காப்பாற்ற நான் உயிரையும் விடத் தயார்!"

சத்துருக்களின் பெருத்த கோஷம் இன்னும் அருகில் வந்தது. ஆயுதங்களின் சத்தம் கேட்டது. விமலா அலறிக் கொண்டு எழுந்து நின்றாள்.

"திலோத்தமா! நீ இப்பொழுதா மூர்ச்சையாக இருக்கிறது? உன்னை எப்படிக் காப்பாற்றுவது?"

திலோத்தமை கண் திறந்து பார்த்தாள்.

திலோத்தமைக்குப் பிரக்ஞை வந்து விட்டது. "ராஜகுமாரா, ராஜகுமாரா! திலோத்தமையை இவ்விடமிருந்து எங்காவது கடத்திச் செல்லுங்கள்!" என்று விமலா பதறினாள்.

"இந்த அறையிலிருந்தபடி எப்படிக் காப்பாற்றுவது? எப்படியாவது இவ்விடம் விட்டு வெளியேறிவிட்டால், உங்களை நான் கோட்டையை விட்டு வெளியே கொண்டு போய் விடுவேன். ஆனால் திலோத்தமைக்கு நடக்கக்கூட சக்தி இல்லையே! விமலா! நான் முன்னே நின்று பிராணனைக் கொடுக்கிறேன். ஆனால் உங்களை அப்புறப்படுத்த முடியாதென்று நினைக்கிறேன்".

"சரி போவோம். நான் திலோத்தமையைக் கூட்டிக் கொண்டு வருகிறேன்" என்று விமலா திலோத்தமையைக் கை கொடுத்துத் தூக்கினாள்.

அவர்கள் அறை வாசற்படிக்கு வந்தபொழுது நான்கு பட்டாணிய சிப்பாய்கள் வேகமாக ஓடிவந்து அங்கே நின்றார்கள்.

"விமலா, என் பின்னால் நில்லுங்கள்!" என்று ஜகத்சிங் கர்ஜித்தான்.

பட்டாணியர் எதிரியைக் கண்டதும், "அல்லா - லா - ஹோ!" என்று கத்திக் கொண்டு பிசாசுகள்போல ஓடிவந்தார்கள். இடுப்பிலிருந்து ஆயுதங்களின் ஒலி எங்கும் பரவிற்று. அந்தக் கூக்குரல் ஓய்வதற்குள்ளேயே ஜகத்சிங்கின் வாள் ஒரு பட்டாணியனின் மார்பில் விடிவரை பாய்ந்தது. பயங்கரமான கூச்சல் ஒன்றைப் போட்டுவிட்டு அவன் உயிரை விட்டான். அவர் மார்பிலிருந்து வாளை எடுப்பதற்குமுன் மற்றொரு பட்டாணியனின் வேல் ஜகத்சிங்கின் தலைப்பக்கம் வந்தது. அது வந்து விழுந்ததோ இல்லையோ என்பதுகூட அறியமுடியாத நேரத்தில் மின்னல் போலக் கையைத் தூக்கி இடதுகையால் அதைப் பிடித்துக் கொண்டான் ஜகத்சிங்; அதே கணத்தில் வேல் எரிந்தவனையும் பூமியில் வீழ்த்தினான். பாக்கி இரு பட்டாணியரும் கணப்பொழுதில் ஒரே சமயத்தில் ஜகத்சிங்கின் தலையைக் குறிவைத்து வாள்களை வீசினார்கள். அதற்குள் வலது கையிலிருந்த வாளால் ஜகத்சிங் மற்றொரு பட்டாணியனின் கையை வெட்டி வீழ்த்தினான். மற்றவனின் அடியைத் தடுக்க அவனால் முடியவில்லை. வாள் தலையில் தாக்கவில்லை; ஆனால் தோளில் பெருத்த காயம் ஏற்பட்டது. ராஜகுமாரன் வேடன் கையால் அடிபட்ட புலிபோல இரண்டு மடங்கு ஆக்ரோஷம் கொண்டான். பட்டாணியன் வாளை எடுத்து மறுபடியும் அடிப்பதற்கு முயற்சி செய்யும்பொழுது, ராஜபுத்திரன் வாளை இருகைகளாலும் இறுகப் பிடித்துக் கொண்டு முன்னே பாய்ந்து பட்டாணியன் தலையில் ஓங்கி வெட்டினான். தலைப்பாகை சகிதமாகப் பட்ணியனின் தலை இரண்டு துண்டங்களாகக் கீழே சாய்ந்தது. அதற்குள் கையிழந்த

பட்டாணியன் இடது கையால் இடுப்பிலிருந்து ஒரு கூர்மையான கத்தியை எடுத்து ராஜபுத்திரனின் உடலை நோக்கிக் குறி வைத்தான். ராஜபுத்திரனின் பாய்ந்தெழுந்த உடல் மறுபடியும் தணித்து நின்றபொழுது, அந்தக் காயத்தை ஏற்படுத்திற்று. ராஜபுத்திரன் அதை ஊசி பாயந்ததுபோல மதித்துப் பட்டாணியனின் இடுப்பில் பர்வதத்தால் அடிப்பதுபோல ஓர் உதை விட்டான். அவன் தூரத்தில் போய் விழுந்தான். ராஜபுத்திரன் வேகமாக ஓடி அவன் தலையை சோதிக்க முயலும்பொழுது, "அல்லா - அல்லா - ஹோ" என்ற பெருத்த சத்தத்துடன் ஒருபெரும் பட்டாணிய சைனியம் வெள்ளம்போலப் பாய்ந்து வந்து அறையில் நுழைந்தது. ராஜபுத்திரன் பார்த்தான். அதற்கு மேல் போராட முயலுவது வெறும் சாவிற்கு மூலந்தான் என்று கண்டான்.

ராஜபுத்திரனின் அங்கங்களில் ரத்தம் பெருகியோடிக் கொண்டிருந்தது. ரத்த நஷ்டத்தால் உடல் தளர்ச்சியடைய ஆரம்பித்தது. திலோத்தமை பிரக்ஞையற்றவளாய் விமலாவின் மேல் சாய்ந்தாள். விமலா அவளைத் தாங்கிய வண்ணம் அழுது கொண்டிருந்தாள். அவள் புடவையெல்லாம் ராஜபுத்திரனின் ரத்தத்தில் நனைந்து போயிருந்தது.

அறையில் பட்டாணிய சைனியம் நிறைந்து விட்டது.

ராஜபுத்திரன் ஒரு தடவை கத்தியின்மேல் தன் உடல் பாரத்தைக் கொடுத்து ஊன்றி நின்று பெருமூச்சுவிட்டான்.

"அடே! உன் வாளைக் கொடுத்துவிடு; உன்னைக் கொல்லவில்லை" என்றான் ஒரு பட்டாணியன். அணையும் தறுவாயிலிருக்கும் நெருப்பில் நெய்யை ஊற்றினதும் கிளம்பும் அக்னி ஜ்வாலைப்போலத் தாவிப் பாய்ந்து ராஜகுமாரன் அந்தப் பட்டாணியனின் தலையைச் சீவி எறிந்தான். வாளைச் சுழற்றிக் கொண்டு, "யவனப்பதரே! ராஜபுத்திரர்கள் எவ்வாறு பிராணனைத் தியாகம் செய்வார்கள் என்பதைப் பார்!" என்றான்.

மறுபடியும் மின்னலைப்போல வாளை வீச ஆரம்பித்தான். அதற்குமேல் தனியாக ஒன்றும் செய்ய முடியாதென்று தீர்மானித்து, சத்துருக்களைக் கூடியமட்டிலும் வீழ்த்திவிட்டு உயிர் துறப்பது என்று உத்தேசம் செய்தான். அப்படி எண்ணினவனாய்ச் சத்துருக்களின் நடுவில் பாய்ந்தான்; இரண்டு கைகளாலும் வாளை இறுகப் பிடித்துக் கொண்டு இருபுறமும் வீசலானான். தன்னைக் காப்பாற்றிக் கொள்வது என்ற எண்ணத்தையே மறந்து, இடைவிடாமல் வாளை வீசினான். ஒன்று, இரண்டு, மூன்று ஒவ்வொரு வீச்சிலும் பட்டாணியர் கீழே சாய்ந்தனர்; அல்லது அங்கங்களை இழந்தனர். நாலு பக்கங்களிலுமிருந்து பட்டாணியர் ராஜபுத்திரன் மீது படைகளை மழைபோலப் பொழிந்தார்கள். கொஞ்சம் கொஞ்சமாகச் சரீரத்திலிருந்து ரத்தம் வெளியேற வெளியேற ராஜபுத்திரன் கை தளர ஆரம்பித்தது; தலை சுழன்றது; கண்களில் மங்கல் படர்ந்தது; கூச்சல்கள் காதில் மங்கி விழுந்தன.

"ராஜபுத்திரனை யாரும் கொன்றுவிடாதீர்கள். உயிருடனேயே புலியைக் கூட்டில் அடையுங்கள்!" என்று யாரோ சொன்னதுதான் ராஜபுத்திரனின் காதில் கடைசியாக விழுந்தது. உஸ்மான்கான்தான் அப்படிச் சொன்னது.

ராஜபுத்திரன் கைகள் பலம் குன்றிப் பக்கத்தில் தொங்கின. பலமிழந்த பிடியிலிருந்து நழுவி வாள் கீழே விழுந்தது. ஸ்மரணைத் தப்பி, தானே வீழ்த்திய ஒரு பட்டாணியனின் மேல் மூர்ச்சையாகி விழுந்தான். அவனுடைய கிரீடத்திலிருந்த ரத்தினங்களை அபகரிக்கப் பத்துப் பட்டாணியர்கள் பாய்ந்தோடி வந்தார்கள். உஸ்மான்கான் கம்பீரமான குரலில், "யாரும் ராஜபுத்திரனைத் தொடக்கூடாது!" என்று உத்தரவிட்டான்.

எல்லோரும் சும்மா இருந்தார்கள். உஸ்மானும் இன்னொருவனுமாகச் சேர்ந்து அவனைத் தூக்கிக் கட்டிலின்மேல் படுக்க கவைத்தார்கள். கொஞ்ச நேரத்திற்கு முன்தான், திலோத்தமையைக் கல்யாணம் செய்து கொண்டு என்றாவது ஒரு நாள் அந்தக் கட்டிலில் படுக்கலாம் என்ற எண்ணம் ஜகத்சிங் மனதில் லேசாக உதித்தது. அதே கட்டில் இப்பொழுது அவனுக்கு மரணப்படுக்கை போலிருந்தது.

ஜகத்சிங்கைப் படுக்க வைத்துவிட்டு உஸ்மான்கான் சேனையைப் பார்த்து, "பெண்கள் யாராவது இருக்கிறார்களா? எவ்வளவு பேர்?" என்று கேட்டான்.

விமலாவும் திலோத்தமையும் உஸ்மானின் கண்ணில் படவில்லை. இரண்டாம் தடவை சேனையின் பிரவாகம் அறையில் நுழைந்தவுடனேயே விமலா நடக்கப் போவதை ஊகித்து விட்டாள். வேறொரு வழியுமின்றித் திலோத்தமையுடன் கட்டிலுக்கு அடியில் ஒளிந்து கொண்டாள். அங்கே ஒருவரும் அவர்களைக் கண்டுபிடிக்கவில்லை. உஸ்மான் அவர்களைப் பார்க்காததால், "பெண்கள் எங்கே? நீங்கள் கோட்டைக்குள் அவர்களைத் தேடுங்கள். நம்மிடம் அகப்பட்டுக் கொண்டவள் பலே கெட்டிக்காரி. அவள் தப்பிவிட்டால நாம் நிச்சயம் கவலையற்று இருக்க முடியாது. ஜாக்கிரதை. ஆனால் யாரும் வீரேந்திர சிங்குடைய பெண்ணிடம் அக்கிரமமாக நடந்து கொள்ளக்கூடாது!" என்றான்.

கோட்டையின் அநேக பாகங்களை நாடிச் சேனையின் கணங்கள் பிரிந்து சென்றன. ஓரிருவர் அறையில் காவல் இருந்தார்கள். எவனோ ஒருவன் கட்டிலுக்கு அடியில் பார்த்துவிட்டான். "அதோ இருக்கிறார்களே!" என்று கத்தினான்.

உஸ்மானின் முகம் சந்தோஷத்தால் மலர்ந்தது. "நீங்கள் வெளியில் வரலாம்; ஒன்றும் கவலைப்பட வேண்டாம்" என்றான்.

விமலா முதலில் வெளியே வந்து, பிறகு திலோத்தமை வெளியே வருவதற்கு உதவி செய்தாள். திலோத்தமைக்கு அப்பொழுது ஸ்மரணை இருந்தது. மெள்ள, "நாம் எங்கிருக்கிறோம்?" என்று விமலாவைப் பார்த்துக் கேட்டாள்.

விமலா அவள் காதில், "ஒன்றும் கவலைப்படாதே; தலை குனிந்து கொண்டு நில்" என்றாள்.

அவர்களைக் கண்டுபிடித்துச் சொன்ன ஆள் முன் வந்து "யஜமான்! நான்தான் ரகசியத்தை வெளியாக்கினேன்!" என்றான்.

"நீ யார்?"

"என் பெயர் கரீம் பக்ஷ். நான் முதலில் மொகலாய சைனியத்தில் இருந்தேன். அவர்களுடைய ரகசியங்கள் எல்லாம் எனக்குத் தெரியும்".

விமலா இதைக் கேட்டு நடுங்கினாள். அபிராமஸ்வாமிகளுடைய ஜோதிஷ கணனம் அவளுக்கு நினைவு வந்தது

"நல்லது, ஞாபகத்தில் வைத்துக் கொள்வோம்!" என்றான் உஸ்மான்கான்.

முதல் பாகம் முற்றிற்று